"Seek Truth wherever you can find it," But, "Make your choice and Stick to it till you reach the End."

ஸத்யம்வத.—Speak the Truth.

"Hitch your Wagon to a Star."　　"To Thine own Self be True."




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம்தத்ஸத்.] God is Love : Knowledge is Power : Om.

ஸத்யமேஜெயம்—Satyameva Jayati.

புத்தகம் 12.]　　1904-ம்ஞு மார்ச்சுமீ　　[இலக்கம் 11.

# *"MY MIND TO ME A KINGDOM IS."

"Close your lips and let your hearts open. Work out the salvation of this land and of the whole world, each of you thinking that the entire burden is on your shoulders"—*Swami Vivekananda.*

"Great Men are they that see that spiritual is stronger than any material force; that thoughts rule the world"—*Emerson.*

"We have to save the rising generation of India from walking in false paths and to guide them into right ones. No Government can do this by itself, and no law that can be placed on the statute book will effect it. But Government can provide the opportunity, and the law can supply the means; and then the responsibility will rest with others, both of your race & mine for taking advantage of them"—*H. E. Lord Curzon's address at the Convocation of the Calcutta University.*

## "தன்வின வென்றவன் தவஸவனுவன்."

"தன்னைத்தா னெஞ்சங் கரியாகத் தானடங்கின்
பின்னைத்தா னெய்தாப் பயனில்லை—தன்னைக்
குடிகெடுக்குநெஞ்சிற்குக்குற்றேவல்செய்யின்
பிடிபடுக்கப்பட்டகளிறு."

"என் மனதே எனக்கொரு ஸ்வாராஜ்யமாயிருக்கிறது." என்று ஒரு ஆங்கிலேய மகாகவி மனோராஜ்ஜியத்தின் பெருமையைப்பற்றிப் பேசியுள்ளார். மனதை யாளக்கற்றவன்

* "An old English poet has said:—'My mind to me a kingdom is,' and I would say to each one of you students, that that line points out the field of your struggle, the dominion that has to be brought into subjection. The joy of the conquest may be known only to the individual, but the victory will influence your every action towards others, and you will rule unchallenged over a realm, inexhaustible, boundless, all-enduring."—H. E. LORD LAMINGTON's *address at the Convocation of the Bombay University.*

மஹாத்மாவாவன். பம்பாய் கவர்னர் லார்ட் லாமிங்டன் அவர்கள் இந்த வசனத்தைச் சொல்லி, பம்பாய் யூனிவர்ஸிடியின் வித்தியார்த்திகளுக்கு வித்தியாபட்டமளித்த காலையில் அவர்களுக்கு ஒரு உத்தம உபதேசஞ்செய்தார்: "நீங்கள் ஜயிக்கவேண்டிய இராஜ்ஜியம் இத்தகைத்தென்று இதனாலறிந்துகொள்ளக் கடவீர்கள். மனதை ஜயிப்பதிலுள்ள சந்தோஷமும் ஆனந்தமும் அவரவர் உள்ளத்தில் அவரவர் அனுபவிக்கத்தக்கதேயாயினும், மனதை ஜயித்த வெற்றியின் பயனாய், பிறரிடத்தில் நீங்கள் நடந்துகொள்ளும் நடத்தையும் உங்கள் ஒவ்வொரு செய்கையும் பாதிக்கப்படுவதாகும். மனதை வெல்லும் வெற்றியினால் அளவற்று அழியாது குறையாதுள்ள ராஜ்ஜியத்தில் இரண்டற்ற தன்னரசு செலுத்தும் தலைவராவீரர்கள்" என்றார். லார்ட் லாமிங்டன் அவர்களுடைய வார்த்தைகள் விளங்கும்பொருட்டு அவர் வாக்கை யிங்கு மொழிபெயர்த்தோம். அவர் சொல்லிய கருத்து இதன் தலைப்பில் குறித்துள்ள செய்யுளில் உண்மை விளங்க உள்ளபடி யிருக்கக் காணலாம். தான் சாக்ஷிமாத்திரமாகவிருந்து தன் மனது தனக்கு முற்றும் அடங்கப் பெறின், பின்பு தானடையக்கூடாத பிரயோஜன மொன்றுமில்லை. அப்படிக்கின்றி தன்னைக் குடிகெடுக்கும் நெஞ்சிற்கு தான் உட்பட்டவனாய், அது ஆட்டிவைத்தபடி யெல்லாம் ஆடி, அதற்கு 'குற்றேவல் செய்யின்'—ஏவல் தொழில் செய்தால், பெண்யானையினால் படுகுழியில் விழ்த்தப்பட்ட ஆண்யானைக்கு ஒப்பாவோம் என்று வெகு நன்றாக வெடுத்துச் சொல்லியிருக்கிறார்.

காட்டுயானைகளைப் பிடிக்கும் தந்திரோபாயம் இதை வாசிப்போருக்குத் தெரிந்தும் தெரியாமலுமிருக்கலாம். காட்டில் யானைக்கூட்டம் நடமாடும் ஒரு இடத்தில் பெரிய படுகுழி வெட்டி அதன்மேல் இலேசான கொம்புகளைக்கொண்டு மூடி தரையோடுதரை சமமாக விருக்கும்படி புல்பத்தைகளால் மறைத்து ஏற்கனவே பிடித்துப் பழக்கப்பட்ட பெண்யானை யொன்றை அந்த யானைக்கூட்டத்தில் போய்ச்சேரவிட்டு காட்டுயானையை அந்தப் பக்கம் அழைத்து வரும்படி யானைப்பாகன் கட்டளையிட்டனுப்புவான். தன் சுதந்தர மிழந்து மனிதனுக்கு அடிமையாகப் பழகின அந்தப் பெண்யானை யானைக்கூட்டத்திற்சென்று அந்த யானைக்கூட்டத்தின் தலையான ஆண்யானையோடு உறவாடி ஆசைகாட்டி மோகம்விளைத்து அதை விழ்த்துவதற்காக வெட்டப்பட்டு மூடியுள்ள படுகுழியின் பக்கமாக அழைத்துச் செல்லும். அந்தப் பெண்யானையை நம்பிச்செல்லும் ஆண்யானை தன் பரிவாரத்தோடும் அதைப் பின்பற்றிச் சென்று படுகுழியில் விழுந்து தன் சுதந்திரமிழந்து மனிதனால் கட்டுண்டு அவனுக்கு அடிமையாக அதன் ஆயுளைக்கழிக்கவேண்டிவரும். அப்படிப்போல் மனசானது ஜீவாத்மாவைத் தன் வசப்படுத்தி, அஞ்ஞான அந்தகாரமென்னும் படுகுழியிற்றள்ளி பிறப்பிறப் பென்னும் பெந்தத்துக்குள்ளாக்கும் என்பது வேதாந்த சித்தாந்தவுண்மை.

இகம்பர மெல்லாவற்றிற்கும் மனதே காரணமாம். மனதில்லாவிட்டால் இகமுமில்லை பரமுமில்லை. எல்லா பேதமும் சுகதுக்கங்களும் 'மனதினால் உண்டானவையே.' மனதைக்கொண்டேதான் எல்லா சுகதுக்கங்களையு மனுபவிக்கவேண்டும். மனோவிருத்தியே பிரபஞ்சவிர்த்தியாம் மனோ நிவிர்த்தியே பிரபஞ்ச நிவிர்த்தியுமாம். புலன்பொறியறிவுகளுக்கெல்லாம் மனதே காரணம். இந்த மனது அதிசூக்ஷ்மமானது. ஆயிரம்கோடிவிதமாக உருமாறித் தோன்றும்.

ஒன்றைவிட்டொன்றுபற்றும். இக்கரைக்கு அக்கரைபச்சை யெனத்தோற்றுவிக்கும், கைக்குக் கிட்டியதைச் சீக்கிரம் கசப்பாகச்செய்து, கைக்கெட்டாத தொன்றை இனிப்பாக நினைத்து வருந்தச்செய்யும். இது எப்போதும் ஆனந்தத்தைத்தேடும். தேடியடைந்ததெதிலும் திருப்தியடையாது. தன்னை வென்று ஆளச் சக்தியுள்ளவர்களுக்கு ஆஞ்சநேயர் ஸ்ரீராமருக்கு ஊழியனாயிருந்துதவியதுபோல் பிரதிகூடாத பக்திரத்னமாகவிருந்து எதையும் செய்து முடிக்கும். தன்னையடக்கி யாளமாட்டாதவருக்கு குரங்காயிருந்து அவர்களைக் கூத்தாட்டுவிக்கும், தத்துவ ஞானமறிந்தவர்களுக்கு இதன் செய்கையையும் சுபாவத்தையும் தத்துவார்த்தமாக வெடுத்து விளக்கலாம். தத்துவஞானம் விளங்கப்பெருத ஏழைமதிகளாம் சாமான்ய ஜனங்களுக்கு இதை இதிகாச ரூபமாகத்தான் விளங்கவைக்கவேண்டும். அதற்காகவே இராமாயணம், பாரதம் முதலிய இதிகாசங்களும் மற்றப் புராணங்களும் இயற்றப்பட்டன. உலகத்தில் எல்லாப் படிப்பும் மனதை யடக்கி யாள்வதற்குபயோகப்படுமளவிற்கே பயன்படுவதாம். மனதைச் சயிக்க உதவாத கல்வி கல்வியோடு சேர்ந்ததல்ல. அது எப்போதும் துன்பமேவிளைக்கும். “மனமிறக்கக் கல்லார்க்கு வாயேன் பராபரமே” யென்றபடி, மனதை வெல்லாதவர்கள் மனிதரோடு சேர்த்தியல்லர். மனிதரூபமாயினும் அவர் மிருகத்தன்மைவாய்ந்தவரேயாவர். இப்படி “மனமிறக்க”க் கற்கும் கல்வியே பிரம்மவித்தையென்று கொண்டாடப்படுகிறது. மேற்றிசைக் கலைக்ஞான விர்த்தியும் இதுவே நோக்கம் கொண்டதாக விருக்கிறது. ஆனால் அத்திசைச் சாதியார் இன்னும் “சிசுப்பிராயம்” விட்டு நீங்காதவர்களா யிருப்பதால் சிறு குழந்தைகள் மணல்வீடுகட்டி விளையாடுவதுபோல் பிரபஞ்ச மாயாவிலாசத்தி லீடுபட்டு விளையாடிக் கொண்டிருக்கிறார்கள். அவர்களும் வரவர ஆத்மவழிக்கு வந்துகொண்டேயிருக்கிறார்கள்.

ஜஸ்டிஸ் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயரவர்கள் பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்ஸரது 76-வது வருஷோற்சவக் கொண்டாட்டத்தன்று சாயந்திரம் செய்த பிரசங்கத்தில் ஹிந்து வேதங்களில் உண்மை உள்ளபடி யுரைக்கப்பட்டிருக்கிறதென்றும், அவைகளினும் மேலான தத்துவ சாஸ்திரம் உலகத்தில் வேறில்லையென்றும்; ஆனால் அதை இக்காலத்து ஹிந்துக்கள் உள்ளபடி யறிந்துகொள்ளமாட்டாதவர்களாய் தப்பர்த்தம் செய்துகொண்டு தவிக்கிறார்களென்றும்; ஐரோப்பியர், அதிலும் முக்கியமாய் ஆங்கிலேயர், ஆத்மானந்தம் தேடும்படியான அவ்வளவு உயர்ந்த நோக்கமில்லாதவர்களாயினும் அவர்கள் மனதுக் கெட்டினமட்டில் எல்லார்க்கும் நன்மையைக்கோறி அவர்கள் கோறினதற் குண்மையாகவிருந்து ஊக்கமுடனுழைத்து வருகிறார்களென்றும்; ஆகையால் ஆங்கிலேயர் ஹிந்துக்களினும் மேலாக விளங்குகிறார்களென்றும் செப்பியர். இது உண்மையே. லார்ட் கர்ஸன் டில்லிதர்பாரில் செய்த பிரசங்கத்திலும் ஆங்கிலேயர் ஜயசீலராயிருப்பதற்குக் காரணம், அவர்கள் புத்திக்கெட்டின அளவு சன்மார்க்கத்தைக்கோறி தங்கள் நல்ல எண்ணத்தால் தங்கள் உண்மையில் தாங்களே பூரண நம்பிக்கை யுள்ளவர்களாய் உள்ளும்புறமும் ஒன்றுபட சுயநயம் பாராட்டாது உழைக்கிறவர்களாயிருப்பதேயென்று அவர்களது உள்மர்மத்தை உள்ளபடியெடுத்து வெளியிட்டார்.

நம்மவர்கள், மதம் என்றால் மதச்சடங்குகளே யெல்லாமென்று நினைத்து சத்திருக்கச் சக்கையை விழுங்கும் கசடர்போல், சடங்குகளையே பெரிதும் பாராட்டி ஆத்மார்த்த வுணர்ச்சி,

யையும் அதற்கு அனுகுணமான ஸத்ய விரதத்தையும் கைநழுவவிட்டுக் காலங்கழிக்கிறார்கள். இதனால் அவர்கள் பூர்வீக நிலைகுலைந்து பதவியிழந்து கெட்டுப்போவதுமன்றி, உண்மைக் களஞ்சியமான அவர்களது புராதனமான உள்மதத்துக்கும் இழுக்குண்டு பண்ணிவைக்கிறார்கள். டாக்டர் டங்கன் சமீபத்தி லெழுதியுள்ள ஒரு கடிதத்தில் "பிரிடிஷ் கவர்ன்மெண்டார் உண்மையான உள்மதவிர்த்தி விஷயத்தில் அலக்ஷியமாக விருப்பதாக நினைக்கக்கூடாது. லார்ட் கர்ஸனும், லார்ட் அம்ப்திலவர்களும் உள்மதக்கல்வி விஷயமாய் அனுதாபம் காட்டிப் பேசியதாக வரைந்துள்ள வசனங்களுக்கேற்க சென்ற 40-வருஷகாலத்தில் கவர்னர்களாகவும் மற்றப்படி உயர்பதவியிலுள்ளவர்களாகவுமிருந்த அங்கிலேயரால் எத்தனையோதரம் இதே விஷயம் வற்புறுத்திப் பேசப்பட்டிருக்கிறது. ஆனால் அவ்வார்த்தைகள் அவ்வக்காலத்திலிருந்த ஹிந்துக்கள் காதில்விழுந்தும் மனதிலுறைக்கவில்லை. ஏனெனில் இப்பொழுது உள்மதவிர்த்தி விஷயமாகவும் கல்வி விஷயமாகவும் நீர் உள்ளத்துறைக்க வுணர்ந்து, உள்ளபடி அதற்காகப் பாடுபடுவதுபோல் உம்தேசத்தார் யாரும் இதற்குமுன் அவ்வளவு ஊக்கங்காட்டி உழைத்தார்களில்லை..............." யென்று கண்டு வித்யா விஷயமாகவும், உள்மதக்கல்வி விஷயமாகவும் விவேகசிந்தாமணி ஏகாக்கிராந்த சிந்தையோடுழைத்துவருவதற்குகந்து அனுதாபங்காட்டி ஆதரவு கூறி யெழுதியுள்ளார். 40-வருஷங்களாக இந்தியாவுக்குழைத்து 10-வருஷங்களுக்குமேல் வித்யா இலாகா தலைவராகவுமிருந்து, முதலில் நாம் உள்மதக் கல்வியின் அவசியத்தைப்பற்றி வற்புறுத்திக் கூறினபொழுது, புறமத ஆடம்பரங்களைப்பற்றி நாம் பேசுவதாகத் தப்பர்த்தம் கொண்டு "சன்மார்க்க விர்த்திக்கு தெய்வத்தில் நம்பிக்கை வேண்டியதில்லை" யென்று எழுதியவர், இப்பொழுது நமது உள்ளக்கருத்தை யுணர்ந்துகொண்டபின் நாம் செய்முயற்சிக்குகந்து நம் யத்தனம் பலிக்கவேண்டிய ஆதரவும்கூறி அனுதாபம் காட்டிவர, நம்தேசத்தவர்களில், ஹிந்துவாய்ப்பிறந்து, வளர்ந்து, படித்துப் பரீக்ஷைகளும் கொடுத்து, சர்க்கார் உத்தியோகத்தில் பொறுப்புள்ள பதவியடைந்தவர்கள் சிலர் உண்மையையுள்ளபடி யறிந்து கொள்ளவும் முயலாமல், நம் முயற்சிக்கு இடையூறுசெய்து வருகின்றனர். வயது சென்றவர்கள் குணத்தை மாற்றுவது அவ்வளவு சுலபமல்ல' தேசநன்மையைக் கோருகிறவர்கள் இளம்பிராயமான சிறுவர்களது மாசற்ற சிந்தையில் ஸத்குண வித்தை விதைத்து "பக்குவத்தேபயிர்செய்" என்னும் ஔவையார் வாக்கை யனுசரித்துழைப்பார்கள். இதற்கு நாம் நம் தமிழ்நாட்டிலுள்ள பாடசாலைகளெல்லாவற்றிலும் இப்பத்திரிகை வழங்கிவரச்செய்துழைப்பதே நம் கோறிக்கை கைகூடுவதற்கு அனுகூலமாம். கவரன்மெண்டார் அந்நிய மதஸ்தர்களாதலால் இதுவிஷயத்திலேதும் செய்ய இயலார். நம்மதக்குரவர்களும் மடாதிபதிகளும் தங்கள் கடமையை மறந்து சீரழிந்து சின்னாபின்னமான நிலையிலிருக்கிறார்கள். மேலும் அவர்கள் இங்கிலீஷ் படிப்பை அசட்டை பண்ணிவந்ததினால் இக்காலத்துக்கேற்றபடி நம் பூர்வ மதத்திலுள்ள உண்மைகளை யெடுத்து காலதேச வர்த்தமானங்களுக் கியையப் போதிக்க சக்தி இல்லாதவர்களாகவிருக்கிறார்கள். பத்திரிகைகளிலும் பல வாசிப்போர் மனோபாவத்தை யுணர்ந்து அவர்களுக் கிதமானவற்றையே கூறி அவர்கள் நல்லபிப்பிராயத்தைப் பெற்றுப் பிழைப்பனவாகவிருக்கின்றன. உண்மையை யுள்ளபடி கூறக் கங்கணங்கட்டிய எவரும், அவர்கள் பிரத்யேக நபர்களானாலும் சரி, பலர் கூடிய சங்கத்தாராயினும் சரி, பத்திரிகை புத்தகம்போன்ற

தற்கால சாதனங்களாயினும் சரி, சாதாரண ஜனங்களுடைய நல்லபிப்பிராயத்துக்குப் பாத்திரராகார் என்பது திண்ணம். ஏனெனில் எவனும் பிறரை மதிப்பது "தன்னளவேயாக" விருக்கும். "தன்னளவுக்கு" மிஞ்சிய எதுவும் "பிராகிருத விருத்த"மாகவே தோன்றுவது மனோதத்துவ இயல்பு. ஆதலால் சாமான்ய ஜனங்கள் கருத்துக்கு மேற்பட்ட ஒன்றை வற்புறுத்தப்புகும் எவரும் முதலில் "ஜனப்பிரீதி" பெறுவது கூடாதகாரியமேயாம். தம்மிலும் மேலானோரென்று ஜனங்கள் மதித்துப் பூரணமாய் நம்பியுள்ளவர்கள் தாம் நிஷிதமாக நினைத்தவற்றைப் பூஷித்துப் பேசக்கேட்டபின்னரே சாமான்ய ஜனங்கள் தங்கள் மனோநிலைமாறி உண்மையையறிந்துகொள்ள ஊக்கமுடன் மனதைச் செலுத்துவார்கள். இப்படி அவர்கள் மனம் பற்றும்வரையில் செல்லுங்காலம் அந்த உண்மைக் கைங்கரிய விர்த்தியாம் (Mission Work) ஸத்காரியத்துக்கு இடையூறுவிளைக்கும் ஏங்கற்காலமேயாகும். இக்காலத்தைக் கடப்பது கஷ்டம். இது ஒரு கண்டத்துக்கொப்பாகும். ஆனால் உண்மையிலே பூரணப்பற்றுள்ளோர் எதையும் ஈசுவரார்ப்பணமாக கர்மபலத்தியாகம்செய்து உண்மைநிலை குலையாது உறுதியாய் நின்றுழைப்பார்கள். இவர்கள் முயற்சி பலிப்பதும் பலிக்காமற்போவதும் இவர்களைப் பாதிக்காது. ஈசுவர சாக்ஷியாக உண்மைக்குஉதாரணமாகவிருந்துழைப்பதே இவர்கள் தலைமேலேறியபாரமாம். இந்தஉள்மதக் கொள்கையையே உண்மையாகப்பற்றி யுள்ளபடி நின்றுழைத்துவருவது நம் கடமையாம். நுனிப்புல்மேயும் சிலர் உள்மத உண்மை யுணராது இதைக் கண்டித்துவருவதால், இப்பொழுது இப்பத்திரிகையை வாங்கி வாசித்துவருவோர், அதிலும் முக்கியமாய் பாடசாலை உபாத்தியாயர்களும், கிராம பாடசாலைத் தலைவர்களும் இப்பத்திரிகையைப் படிப்பதினால் அவர்களுள்ளத்திற்படும் உண்மையான அபிப்பிராயத்தை நமக்கு வெளியிட்டெழுதினால் பிறருக்குபகாரமாயிருப்பதோடு, நாமும் அவர்களது மனோபாவத்துக்குத் தக்கபடி நமது போதனமுறையை மாற்றியுபயோகிக்கக்கூடும். இப்பத்திரிகையின் நோக்கம் தன் மனதை யடக்கி யாள்வதினாலே, தன் மனதினுடைய உதவியைக்கொண்டு இகபரசுகங்களைத் தேடி யுழைத்து என்றுமழியாத ஆத்மானந்தத்தை யனுபவிக்க உதவிபுரியவேண்டுமென்பதேயன்றி வேறல்ல. * இந்த ஒரு நோக்கத்தையேதான் பலவகையாலும் நிறைவேற்ற முயன்றுவருகிறோம். எல்லாப் படிப்புகளும் போதனைகளும் இதையேதான் பிரதமநோக்கமாகக் கொண்டுள்ளதாகவிருக்கவேண்டும். வயிற்றுப் பிழைப்பு இதற்கு உதவியாயுள்ளதேயன்றி வயிற்றுப் பிழைப்புக்கு வித்தை உபகரணமில்லை. தன் மனதை ஜயித்தால் பின்னடையக்கூடாததொன்றில்லை யாதலால் "பாகற்காய்க்காகப் பங்கைவிற்ற கதையாக" வயிற்றுப் பிழைப்புக்காக எல்லா சுகிர்தங்களையும் (வயிற்றுப் பிழைப்புமுள்படக்) கொடுக்கத்தக்க ஆத்மவித்தையை விட்டு, சோற்றுப்படிப்புமட்டும் படித்து, "வாய்த்தவிடும்போழ் அடுப்புநெருப்பும்போன அம்மையார் கதையாக" இரண்டுங் கெட்டானகத் தவிக்கும் இத்தலைமுறையார்களைப்போல் இனித் தலையெடுக்கவிருக்கும் குழந்தைகளும

* "What our country now wants are muscles of iron and nerves of steel, gigantic wills which nothing can resist, which can penetrate into the mysteries and the secrets of the Universe and will accomplish their purpose even if it meant going down to the botton of the ocean and meeting death face to face in every fashion. This is what we want, and that can only be created, established and strengthened by understanding and realising the ideal of the *Advaita*..........Yea, let every man and woman and child, without respect of caste or birth, or weakness or strength, hear and know that behind the strong and the weak, behind the high and the low, behind every one, there is that Infinite Soul assuring the infinite possibility and the infinite capacity of all to become great and good........Power will come, glory will come, goodness will come, purity will come, and every thing that is excellent will come when the sleeping Soul is roused to self-conscious activity."—*Swami Vivekananda*

கெட்டுப்போகாதபடி பார்த்துக்கொள்ளவேண்டியது நம்மவர்களில் கற்றோர், பெற்றோர், எல்லோரையும்பொறுத்த பெருங்கடமையாக விருக்கிறது. நமது இராஜப்பிரதிநிதியாகிய லார்ட் கர்ஸன் அவர்களும் இதே நோக்கத்துக்கிசைய வித்யா இலாகாவில் சீர்திருத்தங்கள் செய்யவிருப்பதைப்பற்றி 'கல்கத்தா யூனிவர்ஸிடி கான்வோகேஷன்' சபையில் தம் உள்ளக்கருத்தை வெளியிட்டுப் பேசியிருக்கிறார். இக்கடமையை யவரவர்களும் ஈசுவர சாக்ஷியாகவும் மனச்சாக்ஷிக்கொப்பிதமாகவும் குறைவின்றிச் செலுத்திவரவேண்டுமாய் பரம்பொருளைச் சிந்தித்து ஈசுவராம்சம்பொருந்திய எல்லவரையும் பிரார்த்தித்துக் கேட்டுக்கொள்கிறோம். ஸ்வாமி விவேகாநந்தரும் இந்த உண்மையையே மிகவும் வற்புறுத்திப் பேசியிருக்கிறார்.

# * THE DISINTEGRATING TENDENCY OF THE INTELLECT.

**"INTELLECT IS VAGABOND."—Emerson.**

"Those of you who have studied know that the Intellect is the separative faculty in Man."—MRS. BESANT's *address on the* EDUCATION OF INDIAN BOYS, *delivered at Trivandrum on 6th January*, 1904.

## "நாரதா கலகப்பிரியா."

### "விக்ஞானமென்பது வியவகாரவிர்த்தி."

சென்ற வெள்ளிக்கிழமையதினம், அன்பெலாம்திரண்டு அருள்வடிவுகொண்டு மரகத ஒளிவீசும் மாக்ஷிமைபெற்ற திருமேனியுடைய ஓங்காரப்பொருளாம் பராசக்தியின் பல மூர்த்தங்களில் ஒன்றாகிய உமாதேவியாரை ஸ்ரீலோகநாயகியாகப் பாவித்துத் தியானித்து ஐம்புலனடங்க ஆத்மப்பிரகாசம் விளங்க ஆனந்தம் பொங்கித் தேகம் புளகாங்கிக்க, நாத்தழும்பேறத் துதித்து மனக்குரங்கடங்கத் தொழுது நிற்கையில், ஸ்ரீகிருஷ்ணபகவான் அர்ச்சுனனுக்கு விசுவரூபதெரிசனம் காட்டியருளியதுபோல் நடராஜமூர்த்தி ஆனந்தத் தாண்டவமாடிக்கொண்டு வந்து அருள்சுரந்து மருள்நீங்க அவர் தூக்கியபாதம் அடியேன் கைகூப்பி வணங்கிய சிரஸில் பதியவைத்து ஆசீர்வதித்து நின்றார். அவர் திருப்பாதம் சென்னியில் படவும், தேகஸ்மரணையடியோடு அற்றுப்போய்விட்டது. மனோவிகாரம் மாயமாய்ப் பறந்தோடிவிட்டது. வாயுவும் போக்குவரத்தின்றி தடாகத்தில் அமிழ்ந்த குடத்தின் உள்ளும் புறமும் நீர் நிறைந்து நிற்பது போல, யோகிகள் 'பூர்ணகும்பகம்' என்று சொல்லும் கேவல கும்பகநிலையில் நின்றது. கோடி சூரியோதயமானதுபோல் ஒரு ஜோதி தண்நிலாவொப்பக் குளிர்ந்த காந்தியோடு தோன்றி ஒளிவீசியது. தோன்றின ஜோதியில் இதுகாறும் சுயம்பிரகாசமாய் விளங்கிய ஆத்மப்பிரகாசம் விழுங்கப்பட்டு நடுப்பகல் வெளிச்சத்தில் நக்ஷத்திரஒளி மறைவதுபோல் மறைந்துவிட்டது. அப்புறம் நினைவில்லை: உணர்வில்லை, தேகம், மனஸு, புத்தி, அகங்காரம், ஆனந்தம் ஒன்றுமில்லை.

* "Generally speaking, dogmatic theology during the nineteenth century has been marked by two distinct currents, both calculated to defeat the disintegrating influence of the purely intellectual ideas of the Revolution, the one being a recurrence to the principle of authority, and the other an appeal to the facts of spiritual experience."—THE MIND OF THE CENTURY.

சுத்தசைதன்னிய சுகானுபவம் ஒன்றுமட்டுமே "எனக்கு அழிவில்லை" யென்று "நாதப்பறை" யறைந்துகொண்டு, ஒப்புயர்வற்றுத் தானேதானாய்த் தன்மயமாய் நின்றது. இடம், காலம், வஸ்து பரிச்சேதங்களெல்லாம் எங்கே போயினவோ! என்னவாயினவோ! சொல்லத்திறமில்லை. வரைவற்ற தொன்றை வரையறுத்துக் கூறுவது எப்படி?

"தான்வரைவற்றபினாரைவரைவது
தானவனானபினாரைநினைவது
காமனைவென்றகண்ணாரையுகப்பது
தூமொழிவாசகஞ்சொல்லுமினீரே."

என்று திருமூலர் ஓதியதிருமந்திரத்தின் திருவுள்ளக்கிடை இவ்வனுபவத்துக்குப்பின் தான் எனக்கு உள்ளபடி விளங்கியது. ஆகையால் இப்படி எத்தனைகாலமிருந்தேனோ சொல்ல வகை யறியேன். ஏனெனில் இந்த அனுபவம்மாறி உள்ளத்தில் ஒருவித ஆனந்த முதித்தபோது ஏதோ சொல்லறியா சுகமனுபவித்தோமென்கிற உள்ளக்கிளர்ச்சியும் சாந்தமும் மட்டுமிருந்த தேயன்றி வேறொன்றும் தோன்றவில்லை. எல்லாம் ஆனந்தமயமாகவே யிருந்தது. இந்த ஆனந்தானுபவத்திற்குப் பின் விவேகமென்னும் பகுத்தறிவுண்டாயிற்று. அப்பொழுது தான் ஜடஜீவத் தோற்றங்களும் வித்தியாசங்களும் முன்போல் எனக்குப் புத்தியிற்பட்டன. ஆனால் இப்பொழுதுண்டான புத்தி முன்னிருந்ததுபோல் மழுங்கல் புத்தியாகவிருந்து பார்த்ததை யெல்லாம் கண்டு மயங்காமல், சூரிய கிரணத்தை யதிலுள்ள பற்பல வர்ணங்களாகப் பிரித்துக் காட்டும் (Prism) திரிகோண வடிவமான ஸ்படிகத்தின் கூர் முனைபோலப், பார்த்த வஸ்துக்களை யெல்லாம் அததன் கூறுபாடுவிளங்க "பட்பட் என்று" பிரித்துக்காட்டும் தன்மை வாய்ந்ததாக விருந்தது. இது எனக்கு மிகவும் ஆச்சரியமாயிருந்தது. "விஞ்ஞானமயமென்பார் கூர்புத்தி யதுவேதான்" என்ற வாக்கியம் எனக்கு அப்பொழுது சட்டென்று ஞாபகத்துக்கு வந்தது. மனதில் இப்படியே எந்தக் கேள்வி யுதித்தாலும் உடனே அதற்கு உள்ளிருந்தே பதிலும் ஐயந்திரிபற உடனுக்குடனே வந்தது. இவ்வளவு மாறுதல்கள் உண்டாகியும் நினைவற்று உணர்வற்று மனதற்று அசைவற்று நின்ற காலத்தில் கண்ட ஜகத்ஜோதி மட்டும் மறையாமல் உள்ளத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்தது.

தாயாய்க் குருவாய்த் தார சகோதரமாய், அன்பாயுருவாய் அதிஷ்டான தெய்வமுமாய், தர்மம் தயவுமாய்த் தானேயாகிக், கண்ணாகிக் கருவிழியாய்க் கண்ணுள் மணியாய் நின்று, கருணைபொழி கடைக்கண்ணால் கடாக்ஷித்து ரக்ஷித்த கருணாநிதியாம் ஈசுவரியை உள்ளமுருகத் துதித்து "அம்மா, உருவாய் அருவாய் ஒளித்து மறைத்து 'கண்ணாமூச்சி' யாடும் குழந்தைகளுக்குத் 'தாச்சி'யாயிருக்கும் தாயவள்போல என்னோடு விளையாட்டுக்காட்டி, இப்பொழுது 'உண்டில்லை யென்றது உருப்பட நின்றது' என்ற திருமந்திரத்துக் கொப்ப, தோன்றி மறைவதே தொழிலாயுள்ள இத்தொல்லுலகில், உறங்கினும் விழிப்பினும், இரவிலும் பகலிலும், என்றும் 'மறையாத ஜோதியுரு'வொன்று அருவாய் விளங்குகிறதே அம்மா, உன் மூர்த்தங்களெல்லாம் எங்கே போயின? நாமரூபங்களாக விளங்கும் உன் மாயாஜால மகிமைகளெல்லாம் [illegible]கே யொளித்தன? இந்த ஜோதி வெளிச்சத்தில் அவை விளங்காவோ? அல்லது விளங்குவதைக்காண உன் சுயம்பிரகாச சத்சொரூபத்தை யுள்ளபடி பார்த்த பார்வை இன்னும்

அவைகளைப் பார்க்கப்பொறுது, சூரியனைப் பார்த்த கண் அந்தப் பார்வையை நீக்கவுடன் இருளில் ஒளியைக்கண்டு மயங்குவதுபோல் தடுமாறி நிற்கிறதோ? விளங்கவில்லையே!" என்று உள்ளத்தில் நினைந்து உசாவினேன். அப்பொழுது ஜில்லென்று குளிர்ந்த தென்றற் காற்று மெல்லென வீச அஃதோடு அதியற்புதமான இதற்குமுன் முகராத ஒரு பரிமளகந்தமும் கூட வீசியது. இந்த வாசனையை முகர்ந்து இக்காற்று வீசப்பெற்றதும் தேகத்திற்கும் மனதிற்கும் ஒருவித குளிர்ச்சியும் சாந்தமும் திடமும் உண்டாகியது. இப்படி திடசித்தனாயிருக்கையில் என் திடனைப் பரிசோதிப்பான்போல் உள்ளத்தில் ஒருவித சலனமுண்டாயிற்று. இது மனக்குரங்கின் சேஷ்டையென்று அனுபவத்தாலறிந்துகொண்டேன். மனமே சலனஸ்வரூபமானதால் சலிக்கட்டுமென்று சும்மாவிருந்தேன். அப்பொழுது "நாரதா கலகப்பிரியா" என்கிற வசனம் என் மனதிற்குள்பட்டது. அந்த சமயத்திலுடனே ஒரு திவ்யபுருஷர் என் முன்னே தோன்றி †'யோகக்ஷேமம்' விசாரித்தார். அவரோடு பிரஸ்தாபித்துக் கொண்டிருக்கையில் "நாரதருக்கு கலகத்திற் பிரியம் என்று சொல்கிறார்களே யேன் ஸ்வாமி?" என்று கேட்டேன். அதற்கு அவர்:—புராண இதிஹாசங்களெல்லாம் மூலதத்துவங்களை சாமான்ய ஜனங்கள் உணர்ந்தனுஷ்டிக்கும்பொருட்டு மஹாத்மாக்களாயுள்ளவர்கள் ஒவ்வொரு தத்துவத்தையும் உருவகப்படுத்தி சரித்திரரூபமாகவெழுதி வைத்தார்கள். இக்காலத்தில்(Jules Verne) என்பவர்போலொத்தவர்கள் இப்படியே சாஸ்திர உண்மைகளை (Novels) என்று சொல்லும் கற்பனைக் கதைகளாக எழுதிவருகிறார்கள். இக்கதைகளையெல்லாம் ஸ்தூலார்த்தம்செய்துகொண்டு பார்த்தால் உண்மை உள்ளபடி விளங்காது. சூக்ஷ்மபுத்தியுள்ளவர்கள் ஸ்தூலத்தைத்தள்ளி உருவகபாவனையாகப் பார்த்துக் கிரகித்துக்கொண்டு போனால் தத்துவங்களெல்லாம் அனுஷ்டானத்தில் எப்படி விளங்குகின்றனவென்பது வெகு நன்றாகத்தெரியும். நாரதரிஷி பிரம்மாவுக்கும் வண்ணாத்திக்கும் பிறந்தவர் என்பது ஐதிக சித்தாந்தம். ஞானானந்தஸ்வரூபியாய் அசைவற்று விளங்கும் ஞானப்பிரகாசம் சுத்த வெள்ளையாம் ஸாத்விக குணத்தோடு சேருவதினாலுண்டாகும் ஒரு சக்தி இவ்விரண்டிற்கும் பிறந்த புத்திரனும் விக்ஞான சக்தி. மனிதனுடையபுத்தி ஆத்மப்ரகாசத்தினால் துலக்கப்படும்பொழுது அது அதிகூர்மையுடையதாய் எல்லா கலைக்ஞானங்களையும் பிரகிருதியாம் பெரிய புத்தகத்திலிருந்து தானே வாசித்துக் கிரகித்துக்கொள்ளும் சக்தியுடையதாகிறது. இப்படி விக்ஞான சக்தியாலுணர்ந்த உண்மைகளைத்தான் அந்த சக்தியில்லாதோர் உணரவேண்டியதன்பொருட்டு அவர்கள் கட்டைப்புத்திக்கேற்க, வேண்டிய அளவு வளர்த்தி கலைக்ஞானங்களாகச் செய்கிறார்கள். இந்த விக்ஞானசக்தி உலகத்திலுள்ள எல்லாப் பொருள்களையும் உள்ளபடி யாராய்ந்து பகுத்தறியும் சக்தியுடையதாயினும், எதையும் பேதித்துப் பார்க்கும் ஸ்வபாவமுடையதால், இந்த பேதபுத்தி அபேததரிசனமாம் ஆத்மஞானத்துக்கு இடையூறேசெய்துவரும். பக்தியைக் கெடுத்து வியவகாரத்தை விர்த்திசெய்யும். இது மனதுக்கு சமாதானத்தைக் கொடுக்காமல் கலக்கத்தைக் கொடுப்பதால் இதற்கு கலகத்திற் பிரியம் என்று சொல்லி இதன் சுபாவத்தைத் தெரிவித்துள்ளார்—என்று மறுமொழிபகர்ந்து, மறைந்தார்.

† 'யோகக்ஷேமம்' = "அப்ராப்திலாபம் யோகம் | ப்ராப்தரக்ஷகம் க்ஷேமம்"—அமரம்.

# *“A NATION RISES NO HIGHER THAN ITS MOTHERS.”

“If India was to develop, the Indian women must be allowed to develop on their own lines. They must be educated on lines beneficial to Hindus. To copy the European would only result in miserable imitation. Every Hindu woman no doubt possessed some of the qualities of Sita. There were other qualities in her which had to be developed. People often complain of the want of religious training in Hindu youths. But if the mothers were properly educated there would be no room for that complaint.”—SIR S. SUBRAMANIA IYER, *on the lessons taught by Sri Ramakrishna's life.*

“Miss Hughes insisted that understanding of the East was necessary before Europeans could attempt to instruct Orientals. The history of the country should also be known. No race could properly educate another, each race must evolve its own education.”—Miss Hughes at a meeting of the N. I. A., London, on the “Education of the women of the Far East.”

## “தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை.”

இந்தியாவின் தற்கால நிலைமையும் வருங்காலச்சீரும் எல்லாராலும் மிகக்கவனிக்கப் பட்டுவருகிறது. பூர்வத்தில் ஹிந்துக்கள் நாகரிகத்திலும் செல்வத்திலும் பேர்போனவர்களா யிருந்தார்களென்பதிற் சந்தேகமில்லை. அவருடைய சந்ததியர்களாகிய இக்காலத்து ஹிந்துக்கள் ஒற்றுமையின்றி செல்லிக்காய் மூட்டைகளாய் பிரிடிஷ் அதிகாரம் என்னும் கோணிப் பையினால் கட்டுண்டுகிடக்கிறார்களென்பதும் ஸ்பஷ்டம். இப்பொழுது இந்தியர்கள் முன்னுக்கு வந்து சீர்பெற்று விளங்குவது எப்படி ? என்பது எல்லார் சிந்தையையும் கவரத்தக்க முக்கிய விஷயமாயிருக்கிறது. சிலர் சாஸ்திரங்களை அனுஷ்டித்தாலன்றி ஹிந்துக்கள் முன்னுக்கு வரார்கள் என்கிறார்கள். சிலர் கிறிஸ்தவர்களுடைய அக்கிரம ஆர்ப்பாட்டங்களை யடக்கினாலன்றி ஹிந்துக்கள் கடைத்தேறார் என்கிறார்கள். சிலர் ஐரோப்பியர்களைப்பார்த்து நமது ஆசார அனுஷ்டானங்களைச் சீர்திருத்திக்கொண்டாலன்றி நாம் உருப்படோமென்கிறார்கள். இன்னும் சிலர் ஜாதிமதபேதங்களை யெல்லாம் விட்டொழித்து எல்லாரும் வித்யாசமின்றி கலந்து ஒன்று பட்டாலன்றி நமக்கு கதிமோக்ஷமில்லை யென்கிறார்கள். இப்படி பலர் பலவிதமாகச்சொல்லி, ஒரு சாரார் மற்றொரு சாரார்மீது குற்றங்கண்டு பிடிப்பதும், அவர்கள் வழிவகைகளைக் கண்டித்து தாங்கள் போகிறவழியே புனிதமானது என்று விதண்டாவாதம் செய்வதுமாயிருக்கிறார்கள். இது விஷயமாக பாரதூர யோஜனைசெய்து ஆரஅமர ஆராய்ந்து சிந்திக்கில் இவை யெல்லாம் மேலோட்டமான வழிகளேயன்றி மூலாதாரத்தைப் பற்றினவையல்ல வென்று ஸ்பஷ்டமாய் விளங்கும். காலதேசவஸ்து பரிச்சேதங்களுக்குட்படாமலும் அவைகளால் மாறு படாமலுமிருக்கும் வஸ்து ஒன்றே. அது “ஏகமே வாத்விதீயம்” என்னும் சுருதிவாக்கியத்துக் கிலக்காய் இரண்டற்று ஏகமாய் விளங்கும் மூலகாரணப்பொருள் ஒன்றேயாம். இந்த ஏகமான நித்ய சுத்த முக்தப் பொருளை யனுசரித்து விளங்கும் தத்துவங்கள் அனேகமுள. இத்தத்துவங்

* If India is to have no future, then by all means leave the women ignorant, but if you look to a bright future, then for every day you postpone the education of your women, you postpone in equal measure, and in exact proportion that bright future, for, “a nation rises no higher than its mothers.”—Mrs. Benson.

களை யாதாரமாய்க் கொண்ட கொள்கைகள் அனேக மிருக்கின்றன. இந்தக் கொள்கைகளை யுள்ளபடியுணர்ந்து காலதேச வர்த்தமானங்களுக்கிசைய அவைகளைப்பொருந்த அமைத்து அனுஷ்டிப்பவர் யாரோ அவரே எத்தேசத்தராயினும் எம்மதத்தராயினும் எக்காலத்தவராயினும் உண்மையில் உள்ளபடி கடைத்தேறிப் பிழைப்பவர்களாவார்கள். மற்றவர்களெல்லாம் உத்ஜீவிக்கப் போட்டிபோட்டுக்கொண்டு மாண்டு மடியவேண்டியவர்களேயாம். நமது சாஸ்திரங்களுக்கு எனவ்வளவு மேன்மையென்றால் அதைச் செய்தவர்கள் திர்க்கதரிசிகளாய் உண்மைக்கொத்தவர்களாயிருந்து தங்கள் ஸ்வானுபவச் செல்வப் பெருக்காலுண்டான ஞானதிர்ஷ்டி கொண்டு எக்காலத்துக்கும் பொருந்த ஜனசமூகங்களும் ஜீவகோடிகளும் சத்தியத்துக்கொப்ப சன்மார்க்கவழியனுசரித்து சாம்பிராஜ்யம்பெற்றுய்யும்பொருட்டு 'விர்த்தி க்ஷய லய' முறைபற்றிமுக்கியமான மூலக்கொள்கைகளை காலத்துக்கேற்கப் பொதுவாய்விளங்கத் திரட்டி சாஸ்திரங்களாக்கிவைத்தார்கள். இந்த சாஸ்திரங்கள் எக்காலத்துக்கும் பொருந்துபவையென்பது, காலாதீதமான தத்துவக்கொள்கைகள் எக்காலத்து மொன்றே யென்னுமர்த்தத்தில் பொருந்துமேயன்றி மற்றப்படி கால தேச வர்த்தமானங்களை யொட்டிப்பார்த்தால் பொருந்தாவாம். சாஸ்திரங்களை ஆதாரமாகக் கொள்வோர் சாஸ்திராதீதமாய் சாஸ்திரங்களுக் கெல்லாம் காரணமாயிருக்கும் உண்மையை யுள்ளபடி யறியாது வார்த்தைகளை மட்டுங்கொண்டு வாக்கியார்த்தம் செய்யப் பார்ப்பது முற்றும் பலிக்காமற்போகிறது. பூர்வத்தில் ஹிந்து ராஜாக்கள் ஞானிகளைப் பூஜித்து அவர்கள் வாக்கைச் சிரமேல்கொண்டு இராஜ்ஜியபாரம் செய்து வந்தார்கள். இக்காலத்து கவர்ன்மெண்டாரும் அப்படியே தர்மத்தை மேலாக அனுசரித்து இராஜ்ஜியபாரம் செய்கிறவர்களாயிருக்கிறார்கள். ஆள்வோருக்கும் ஆளப்படுவோருக்கும் ஜாதிமதவேற்றுமையும் இன்னும் பல வேறுபாடுகளு மியல்பாயேற்பட்டிருப்பதால் அவர்கள் எக்காலத்துக்கும் பொதுவான சாஸ்திர உண்மைகளை யுணர்ந்து உள்ளபடி அதை இத்தேசத்தின் பூர்வ சரித்திரத்துக்கும் ஜனங்களின் தேகமனோ தர்மங்களுக்கும் பொருந்த அனுஷ்டிப்பது அவர்களுக்கு சாத்தியமாகவில்லை. ஹிந்துமதமும் ஹிந்துநாகரிகமும் உண்மையில் உள்ளபடி ஐரோப்பியர் மதம் ஐரோப்பியர் நாகரிகம் இவற்றைவிட மேலானதாகவிருப்பது வாஸ்தவமானால் (வாஸ்தவமென்பதிற் சந்தேகமில்லை) மேற்படியிலுள்ளவர்கள் கீழ்ப்படியிலுள்ளார் உண்மையையும் அனுபவத்தையும் உள்ளபடியறிந்து தங்கள் அனுபவத்திற்குக் கொண்டுவருவது சுலபமாம். கீழ்ப்படியிலுள்ளார் மேற்படியிலுள்ள நாகரிகத்தி னுண்மையையுள்ளபடி யுணர்வது அசாத்தியமாம். அத்வைத சித்தாந்தம்பற்றி ஆத்மானந்தானுபவம் பெற்றவர்கள், விசிஷ்டாத்வைதம், துவைதம், சகுணோபாசனை முதலியவற்றை எளிதிலறிந்து கொள்ளலாம். அப்படியே கீழ்ப்படியிலுள்ளவர்கள் மேற்படியுண்மையை அந்தப்படியிலிருந்து உணரசாத்தியமில்லை. பகவத்கீதையை அனுபவார்த்தமாக அறிந்தவர்கள் கிறிஸ்துவையும் கிறிஸ்துபோதமாம் பைபிலிலடங்கிய உண்மைகளையும் உணருவது இலகுவாம். கிறிஸ்துவை சகுணோபாசனைசெய்து அவ்வுபாஸனபலன் பெற்றவர்கள் நிர்க்குணோபாசனையை யுள்ளபடி யுணர்தல் எளிதன்று. இந்தவுண்மையை யுணராமல் சில கிறிஸ்தவ பாதிரிகள் பகவத்கீதை பைபிலுக்கு உபகரண நூல் என்று சொல்லி வாதிக்கிறார்கள். இது அவர்கள் அறியாமையால் சொல்வது. அறியாமை யகன்றாலொழிய அவர்கள் உண்மையை உள்ளபடி யுணரார். இது நிற்க. இப்பொழுது இவையெல்

ஷம் தலைப்பெயரிலுள்ள வாக்கியத்துக்குப் பொருந்துவதெப்படி என்கிற கேள்வி பிறக்கலாம். அதைக் கீழே சொல்கிறோம்.

ஹிந்துக்கள் முன்னுக்குவர வழியென்னவென்றால் தாய்மார்களை முன்னுக்குக் கொண்டுவருவதே உண்மையானவழி. "தாயைப்போல பிள்ளை, நூலைப்போல சேலை" யாதலால், தாய் சீர்பட்டாலன்றி, பிள்ளை சீர்படாது. ஏனென்றால் நூல் எவ்வளவு சந்நமாயிருக்குமோ அவ்வளவு சந்நமாகத்தானிருக்கும் சேலையும். நெசவுகரணங்களும் நெசவு வேலைக்காரனும் எவ்வளவு மேன்மைப்பட்டிருக்கினும் நூலைவிட சந்நமான சேலை நெய்யமுடியுமா? புருஷர்கள் படித்துத்தேறி கல்விப்பயிற்சியில் மிகுந்தவர்களாயிருக்கிறார்களே தாயைப்போல தகப்பனும் உற்பத்திகாரணன்தானே, தகப்பனுடைய விர்த்தியும் சீர்மையும் பிள்ளைகளிடத்தில் விளங்காதாவென்று கேட்கலாம். ஆனாலதற்குள்ள குறையைக் கவனிக்கவேண்டும். வித்து மட்டும் நல்லதாயிருந்து, விதைக்கும்நிலம் வளங்குன்றி வரட்டுத்தரையாக விருந்தால் அவ்வித்து உள்ளபடி பலனைக்கொடுக்குமா? "தண்ணீர்நிலநலத்தால் தக்கோர்குணங்கொடையால்" என்றிருப்பதால், தாய் தகப்பன் இருவருடைய குணங்களும் பிள்ளையினிடத்தில் பிரதிபலிப்பது உண்மையாயினும், தகப்பனுடைய சீர்மையும், மேன்மையும் தாயினுடைய நலத்தினளவாகவேயிருக்கும் பிள்ளையினிடத்தில். தண்ணீர் நலம் அதுஊறும் நிலத்தினுடைய நலத்தினளவாகவேயிருப்பதுபோல் பிள்ளைகளின் நேர்மையும் சீர்மையும் தாயினது நேர்மை சீர்மையின் அளவினதாகவேயிருக்கும். இது ஒரு பெரிய உண்மை. இது மாறாத தத்துவக்கொள்கை. இந்த உண்மையை மிஸ்ஸஸ் பென்ஸன் துரைசானி வற்புறுத்திக்கூறி ஹிந்துக்கள் முன்னுக்கு வரவேண்டுமானால் பெண்களைப்படிப்பித்து முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்: ஏனென்றால் ஒரு ஜாதியின் நேர்மையும் சீர்மையும் அச்சாதியிலுள்ள தாய்மார்களின் நேர்மை சீர்மைக்கு மேலானதாக ஒருக்காலும் ஆகாது என்றுசொன்னார். ஜஸ்டிஸ் ஸர் எஸ். சுப்பிரமணிய ஐயர் அவர்களும் இந்த உண்மையையே வற்புறுத்தி ஹிந்துஸ்திரீகள் முன்னுக்குவந்தாலன்றி ஹிந்து வாலிபர்கள் 'முன்னுக்கு வரார்கள் என்று சொன்னார். தாய்மார்கள் பக்திசிரத்தையுள்ளவர்களாயிருந்தால் பிள்ளைகளும் அப்படியேயிருப்பார்கள். நேற்றையதினம் நாம் பி. ஏ. பரீக்ஷையிற் றேறின ஒரு வாலிபனைக்கண்டு பேசிக்கொண்டிருக்கையில் அச்சிறுவரது உத்தமகுணத்தைக்கண்டு வியந்து "அப்பா உனக்கு இவ்வளவு தர்மசிந்தைபடிந்தது எப்படி? மதபோதனையினாலுண்டாயிற்றா?" என்று கேட்கலானோம். அதற்கு அவ்விளைஞன் கொடுத்த விடை மிகவும் உண்மையாயிருந்தது. 'நான் பக்திசிரத்தைநிறைந்த தாய் முதலானோர் நடுவேயிருந்துவளர்ந்தேன். அவர்கள் தர்மசிந்தனையென்னிருதயத்தை நானறியாதேபற்றி என்னையாண்டதன்றி பள்ளிப்பழக்கத்தினால் இந்த தர்மசிந்தையுண்டானதென்று சொல்வதற்கில்லை' யென்று செப்பினன். அவ்வாலிபச்சிரேஷ்டனை அவன் குடும்பத்தாரோடு நாமறிவோமாதலால் அவ்விளைஞன் உண்மையையே செப்பினானென்று நாம் உறுதியாய்க் கூறுவோம். பீ. ஏ. பரிக்ஷையிற்றேறும்படி படித்தும், அவன் படித்த கலாசாலையில் மதபோதனையிருந்தும், அவன் உள்ளம் பாலப்பருவமுதல் பழகிய தன்தாயின் தர்மசிந்தனையால் உருகியுருவாயிற்றேயன்றி அவன் பள்ளியிற்படித்த படிப்பினாலில்லை. ஆகையால் ஹிந்துக்கள் முன்னுக்கு வரவேண்டுமானால், ஹிந்துக்களில் தாய்மார்களாகவிருப்பவர்களை முதல்முதல் முன்னுக்குக் கொண்டுவரல்வேண்டும். அதுவும் அவர்களைத்

தங்கள் ஸ்வதாவில்விட்டு, ஹிந்துமதவழியில் அவர்கள் மேன்மையடைந்து விளங்கச்செய்ய வேண்டும். அப்பொழுதுதான் தீரமும், வீரமும், சத்தியமும், சாந்தமும் பொருந்திய புண்யாத்மாக்கள் புனர் ஜன்மமெடுத்து ஹிந்துக்களைக் கடைத்தேறச்செய்ய காருண்ய புருஷர்களாக வந்தவதரிப்பார்கள். சற்புருஷர்கள் நிறைந்துள்ள ஜனசமூகம் எப்போதும் உத்தமவழியில் விர்த்தியடைந்து உலகத்தில் பிரக்கியாதிபெற்று விளங்குவதோடு, இவ்வுலகமே அவர்களால் முன்னுக்கு வருவதாகும். ஐரோப்பியர்கள் ஹிந்துக்களுக்குப் போதிக்கவருமுன் ஹிந்துக்களுடைய குணங்களையும் அவர்கள் பூர்வசரித்திரங்களையும் அறியவேண்டியதவசியம். அப்படியே நாமும் ஆங்கிலேயர்களிடத்துச் செல்வாக்குப்பெற அவர்கள் வழியிலிறங்கி அவர்களது உண்மைகளையும் உத்தம குணங்களையும் நம்மில் விளங்கச் செய்துகொள்ளல்வேண்டும். இதுவே உண்மையில் முன்னுக்குவரும்வழியாம்.



## THOMAS ALVA EDISON—THE WONDERFUL INVENTOR.

## தாமஸ் ஆல்வா எடிஸன்-அற்புத கற்பித சிகாமணி.

இன்றைக்குச் சுமார் 40 வருஷங்களுக்குமுன் அமெரிக்கா ஐக்கிய மாகாணங்களிலுள்ள 'டிட்ராய்ட்' பட்டணத்தில் 14-வயதுள்ள ஒரு பையன் அவ்வூர் ரயில்ஸ்டேஷனில் சமாசாரப் பத்திரிகைவிற்கும் தொழிலில் அமர்ந்திருந்தான். அந்த ஊரில் 'டிட்ராய்ட் ப்ரீப்ரெஸ்' என்று ஒரு சமாசாரப்பத்திரிகையிருந்தது. அப்போது அமெரிக்கா இரண்டுபட்டு, ஐக்கியமாகாணவாசிகளே இருகக்ஷியாகப் பிரிந்து இருவருக்கும் ஸிவில் யுத்தம் நடந்துவந்தது. யுத்த சமாசாரம் தெரிந்துகொள்ள ஜனங்கள் ஆவலாயிருந்தார்கள். ரயில்ஸ்டேஷனில் போகும் பிரயாணிகளுக்கு அப்போதப்போது வெளியாகும் சமாசாரங்களைத் தெரிவிக்க ஒரு யுக்திசெய்து ரயில்வேஸ்டேஷனிலுள்ள கறுப்புப் பலகைகளில் முக்கிய சமாசாரங்களை யெழுதி விளம்பரப்படுத்திவந்தான். இதனால் இப்பையன் பேர் பிரசித்தியடைந்து ரயில்ஸ்டேஷனில் நடக்கும் வியாபாரம் முழுவதும் இவன் கைவசமாகியது. ஒருமுறை யுத்தம் மும்மரமாய்நடந்தபொழுது 2-அணாப் பத்திரிகையை இவன் 10-அணாவுக்கு விற்றுமுதல்செய்து பெரும்லாபம் அடைந்தான். இந்தப் பெருலாபத்தோடு திருப்தியடையாமல், இதை மூலதனமாகக்கொண்டு, ரயில்வண்டித் தொடரிலேயே ஒரு பழையவண்டியில் தேய்ந்துபோன முத்திராக்ஷரங்களை சுலபவிலைக்கு வாங்கி தானே முக்கிய சமாசாரங்களைத் திரட்டி, யச்சுக்கோர்த்து, அச்சிட்டு விற்று வியாபாரம் செய்யத்தலைப்பட்டான். இப்படி இத்துறையில் இவன் வியாபாரம் பல்கிப்பெருக இவன் மிகவிருத்தியடைந்துவந்தான். இப்படி நடந்துவருங்காலையில் ஒருநாள் தற்செயலாய் இவனுடையதொழில் நடத்தியவண்டி தீப்பற்றிக்கொள்ள, வண்டித்தொடர் முழுவதுந் தீக்கிரையாகத் தெரிந்தது. நல்லவேளையாக அந்த அபாயம் நல்லசமயத்தில் கண்டுபிடித்துத் தவிர்க்கப்பட்டது. ஆனால் அதோடு இவன் தொழில் நின்றுபோக இவனுக்குப் பெரு நஷ்டம் வந்தது. இப்படி பலவிதத்தில் கஷ்டப்பட்டு தன் முயற்சியாலே ஜீவனம் செய்துகொண்டு மேன்

மேலும், விர்த்தியைநாடி யுழைத்துவந்த வாலிபச்சிறுவன் தாமஸ் ஆல்வா எடிஸன் என்னும் பேருடையவன்.

இப்பொழுது எடிஸன் என்னும் பேர் இவ்வுலகெங்கும்ப்ரவியுள்ளது. 'Graphophone' என்னும் பேசும் யந்திரம் நிர்மித்து இந்திர ஜாலவித்தை செய்துவரும் மந்திரவாதி யிவரே. உலோகங்களையும், பொம்மைகளையும், மனிதர்களுக்குச் சரியாய்ப் பேசவும் பாடவும்செய்து மனிதனும் ஜீவன், ஈசுவரன் சூத்திரதாரியாகவிருந்து ஆட்டிவைக்கும் சூத்திரப்பாவையென்று சொல்வதற்கொப்ப, தானும் ஒரு ஈசுவரன்போல் சூத்திரப்பாவைகள்செய்து அவைகளைப் பேசுவித்து பிரம்மபட்டத்துக்குப் போட்டிபோடுபவன்போல் விளங்கும் மகான் என்று பேர்பெற்றிருக்கிறார். விசுவாமித்திரர் திரிசங்குக்கென்று தனியாக ஒரு ஸ்வர்க்கம் நிர்மித்ததுபோல் எடிஸன் மனிதருக்குச் சமமென்று சொல்லத்தக்க சூத்திரப்பாவை கற்பித்து இன்னும் எத்தனையோ அற்புதங்கள் விளைவித்துவருகிறார்.

இப்படிப்பட்ட மகான் நல்லகுடியிற் பிறந்தும் குடும்பசொத்து நஷ்டபட்ட காரணத்தால், 14-வயதில் தனக்குத்தானே ஜீவனோபாயம் தேடிக்கொள்ளவேண்டி நேரிட்டது. நேரிடவும் பின்வாங்காது துணிந்துநின்று கைக்குக்கிடைத்த தொழிலில் ப்ரவேசித்து இவ்வாறு சுயஜீவனம் செய்துவந்து அதில் விர்த்தியடைந்தபின் திடீரென்று அகஸ்மாத்தாக நேர்ந்த ஒரு ஆபத்தால் ஜீவனமிழந்து வேறு உபாயந் தேடவேண்டியவனாகவிருந்தான். இப்படி நூதன ஜீவனோபாயத்துக்கு வழிபார்த்துக் கொண்டிருக்கையில் ஒரு ஸ்டேஷன்-மாஸ்டருடைய பெண்குழந்தையொன்று ரயில் வந்துகொண்டிருக்கையில் தண்டவாளத்திடையே விளையாடிக்கொண்டுபோய்விட்டது. ரயிலெஞ்சினோ அதிவேகமாக வந்துகொண்டிருக்கிறது. இன்னும் ஒரே நிமிஷம்! ஓடியாடி விளையாடிக்கொண்டிருக்கும் குழந்தை ரயில்வண்டியின் கீழகப்பட்டுத் துவையலாகப்போய்விடும். இந்த ஆபத்தைக்கண்டு எல்லாரும் திகைத்தார்கள். எடிஸன் என்னும் வாலிபனோ இதைக்கண்ட க்ஷணமே, ஒரு தாவல்தாவி கெருடன் மீனைக் கவர்ந்து செல்வதுபோல் குழந்தையைக் கையில் வாரிக்கொண்டோடி தண்டவாளத்துக் கப்பால் குதித்து அக்குழந்தையைக் காப்பாற்றினான். இதைக்கண்ட ஸ்டேஷன்மாஸ்டர் மனமுருகி அவனுக்குப் பணத்தாலுதவிசெய்யக் கூடாதவனாயிருந்ததால் தந்தியடிக்கும் வித்தை கற்றுக்கொடுத்தார். இந்த வித்தையில் எடிஸன் மகாசமர்த்தனாகிப் பின்னால் மின்சாரவித்தையில் மிகத்தேர்ந்த விற்பன்னனானான். இப்படி பலதுறைகளிலிறங்கி ஜீவனோபாயநிமித்த முழைத்துவருகையில் ஒருமுறை ஒரு வியாபாரக் கம்பெனிக்குள் மாதம் 60-பவுன் சம்பளத்தில் ஒருவேலையிலமர்ந்தான். அந்த வேலையிலிருக்கையில் உண்டியல் பத்திரம் அச்சிடும் யந்திரமொன்று அதியற்புதமாக நிர்மித்து அதை 1000-பவுனுக்கு விற்க உத்தேசித்தான். அதைப்பார்த்த அவனுடைய எஜமான வியாபாரக்கம்பெனியார் அவனுக்கு அந்த யந்திர நிர்மாண சுதந்தரத்துக்காக 8000-பவுன் அளித்தார்கள். எடிஸன் தான் எதிர்பார்க்காத இவ்வளவுபணம் இவர்கள் அளித்ததைப்பார்த்து பிரமித்து, இதில் ஏதோ சூதிருக்கிறதென்று தீர்மானித்து; எப்படியாகிறதோ பார்க்கலாமென்று விற்பனைப்பத்திரத்தில் கையெழுத்துப் போட்டுவிட்டு 8000-பவுனுக்குக் கொடுத்த 'செக்கு' என்னும் உண்டியலை யெடுத்துக்கொண்டு அதைமாற்ற பாங்கிக்குப் போனான். அங்கே பாங்கி கிளார்க்கு அதைப்பார்த்து என்னென்னவோசொல்ல ஒன்றும் புரியாமல் மதிமயங்கி தைரியமிழந்து

பாங்கியின் படிக்கட்டில் மனமயர்ந்து சோர்ந்துபோய் உட்கார்ந்தான். இவன் ஆயுள்காலத்தில் இவன் மனமயர்ந்து சோர்ந்தது இதுதான் முதல்தடவை. பிறகு அந்த உண்டியலைக்கொண்டு தன்னுடைய கம்பெனி குமஸ்தா ஒருவரிடம் காட்ட அவர், சங்கதியை விசாரித்து, 'உண்டியல் பெருந்தொகைக்காக விருப்பதால் எடிஸன் இன்னாரென்று மூதரிக்க வேண்டுமென்று சொன்னதாகவும், எடிஸனுக்குக் காதுகேளாமையால் (இளமைப்பருவம்முதல் காது ஊனமாகவே யிருந்ததென்று தெரிகிறது) தியங்கிப்போனாரென்றும் தெரிந்தது. பிறகு அவ்ரே ஆளை மூதரிக்க 8000-பவுனும் கிடைத்தது. இதை மூலதனமாகக்கொண்டு சொந்தத்தில் தான் நூதன யந்திரங்கள் முதலானது கற்பிப்பதைச் செய்விக்க ஒரு வேலைச்சாலை நிர்மித்துக்கொண்டார். இந்த வேலைச்சாலை இப்பொழுது மேன்மேலும் வளர்ந்து பெருகி இப்பொழுது தேனீக்கூண்டு போல் அதியற்புதமாய் விசுவகர்மா நிர்மித்த அற்புத ஆலயம்போல் விளங்கும் ஒரு பெரிய தொழிற்சாலையாக விருக்கிறது. அங்கே இப்பொழுது 50-வயதுள்ள எடிஸன் என்பவர் தினம் 20-மணிநேரம் ஓய்வொழிவின்றி மனதாலும் புத்தியாலும் திரிகரண பூர்வகமாயுழைத்து வருகிறார். அமெரிக்கா முழுமையிலும் இவரைவிடக் கஷ்டப்பட்டு வேலைசெய்வோர் வேறில்லை. மேற்றிசை நாகரிகம் இவர் ஒருவரது கற்பித சாமர்த்தியத்தால் எவ்வளவோ மாறியிருக்கிறது. இவரொருவரில்லாவிடின் இவ்வுலகமே இப்பொழுதுள்ளபடியிராது. நாகரிகத்திற்கு இவரா லுண்டான உதவி அவ்வளவு பெரிதாய் மதிக்கற்பாலதாயிருக்கிறது! இவர் யந்திரதந்திர வகைகளில் நூதனமாய்க் கண்டுபிடித்த கற்பிதப்பொருள்கள் அளவற்றன. அவைகளை யெல்லாம் சொல்ல இங்கு சாத்தியமில்லை. ஆனால் இப்படி பஞ்சேந்திரியங்களில் ஒன்றாகிய செவியின் சக்தியிழந்தும் உலகமுழுதும் அற்புதமாக விளங்கும் அனேக நூதன கற்பிதங்களை நியமித்து; இவர் விசுவகர்மா அவதாரமோ, அல்லது பிரம்மாவாகவேயிருந்து பிரம்ம பட்டமிழந்து உலகில் வந்தவதரித்த அவதார புருஷனோவென்று அதிசயிக்கும்படியான இவர் வேலைசெய்யும் முறையும், வேலையிலாழ்ந்த சிந்தையுடையவராயிருக்கையில் இவருடைய மனோதத்துவ இயல்பும் மிகக்கவனிக்கத்தக்கது. சென்னையில் ஹைகோர்ட் ஜட்ஜியாயிருந்து 20-வருஷங்களுக்கு முன் பென்ஷன் பெற்றுச் சென்ற கனம்பொருந்திய ஜஸ்டிஸ் இன்ஸ் அவர்களுக்குச் சென்ற வருஷம் நாமெழுதிய ஒரு கடிதத்தில் மேற்றிசையார் கண்டுபிடிக்கும் அதியற்புதமான நூதன உண்மைகளெல்லாம் தன்னை மறந்து, தன்மனது தான்சிந்திக்கும் பொருளோடு தத்துவத்தி லொன்றுபட்டு லயித்தகாலத்தி லுதயமானவையே யன்றி வேறல்லவென்றும், யோகசாஸ்திரப்படி எல்லாவுண்மைகளும் உண்மையான எல்லாஞானமும் 'லயயோகம்' என்னும் இந்த தத்துவ வழிபற்றியே பெறத்தக்கவையென்றும் எடுத்தெழுதி வற்புறுத்திக் காட்டினோம். அதற்கு உண்மையான உதாரணம் இவரிடத்தில் கிடைப்பதாயிருக்கிறது. இந்த உதாரணங்களில் சில பின்வருமாறு:—

(i) ஏதாகிலும் ஒரு தத்துவப் பொருளினுண்மையை யுணர மனங்கவர்ந்து ஏகாக்கிராந்த சிந்தையரா யதிலுழைத்துவரும்பொழுது அவர்மனது அதற்கு லக்ஷியமான பொருளோடு கலந்து ஐக்கியப்பட்டுப் போவதால், மற்ற விஷயங்களைப்பற்றிய ஞாபகம் அவருக்கு கட்டோடு அற்றுப் போய்விடுகிறது. உதாரணம்:—ஒருதடவை "இரட்டைத்தந்திமுறை" (duplex telegraphy) விஷயமாய் ஆழ்ந்த சிந்தனையிலிருக்கும்பொழுது மிஸ்டர் எடிஸன் தான் கட்ட

வேண்டிய முனிசிபல் வரியைக்கட்ட மறந்துவிட்டார். அதன்மேல் அவருக்கு ஒரு ஸம்மன் வந்தது. அதில் அடுத்தநாள் இத்தனை மணிநேரத்திற்குள் வரிகட்டியாகாவிட்டால் 100-க்கு 12½-விகிதம் அபராதம் செலுத்தவேண்டுமென்று நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருந்தது. மறுநாள் தான் செலுத்தவேண்டிய வரிப்பணத்தை யெடுத்துக்கொண்டு முனிசிபலாபீஸுக்குவந்தார். அங்கே பணம் வாங்குகிற ஷராபு கூட்டமிகுதியால் உடனே இவரிடத்தில் பணம் பெற்றுக்கொள்ள முடியாமலிருந்ததால், அங்கே மற்றவர்களோடு காத்திருந்தார். தன்னுடைய முறை வரும்வரையில் காத்திருக்கையில் இவருடைய மனசு இவர் சிந்தித்துக்கொண்டிருந்த (duplex telegraphy) விஷயத்தைப்பற்றிச் சிந்தனையிலாழ்ந்து ஏகாக்கிராந்தமாய்விட்டது. இவருடைய முறைவரவும் முனிசிபல் ஆபீஸர் இவரையண்டி அசக்கிக் குலுக்கி "ஏனப்பா, உன்பேர் என்ன! மணியாப்விடப்போகிறது, ஜாக்ரதை! உன்பேர் என்ன ?" என்று கேட்டார்.

"எனக்குத் தெரியாது" என்று பதிலுரைத்தார் இவர். இன்னும் ஒரு வாரத்தில் உலகெலாம் வியந்து கொண்டாடும்படியான உண்மையைக் கண்டுபிடித்து வெளியிடவிருந்த இவரை சித்த சுவாதீனமில்லாத பித்தன் என்று ஒதுக்கிவிட்டார்கள். பிறகு இவருக்கு மனம் திரும்பி வியவகாரதசை யடைந்தபோது குறித்தகாலம் கழிந்துபோய்விட்டது. 100-க்கு 12½ அபராதம் சேர்த்து வரியைக் கட்டவேண்டி நேரிட்டது. இவர் உண்டியல் யந்திரம் நூதனமாய் கற்பித்து நிர்மித்தகாலையில் இவருக்கு வயது 17. இச்சரித்திரம் எழுதுங்காலையில் 50-க்கு மேலாய்விட்டது. இந்த 33-வருஷங்களுக்குள் இவர் 400-விதமான கற்பித யந்திரங்கள், சூக்ஷ்மங்கள், சூஸ்திரங்கள் கண்டுபிடித்து அவைகளுக்கு சுதந்திர பாத்தியம்பெற்றிருக்கிறார். இவைகளன்றி சில்லரையாக இன்னும் எத்தனையோ ஆயிரக்கணக்கான கற்பிதங்கள் நிர்மித்திருக்கிறார். இவருடைய கற்பிதநிர்மாணங்களுக்கு சுதந்தரபாத்தியம்பெறக் கட்டவேண்டிய ஸ்டாம்புக் கட்டணம்மட்டும் வருஷத்தில் சராசரி 150-பவுனாகிறது. 17-வது வயதுமுதல் 50-வது வயதுவரையில் இதற்காக 5000-பவுன் செலுத்தியிருக்கிறார். இவர் ஒருதுறையில்தான் இறங்கி யுழைத்தார் என்பதில்லை. சமையல் அடுப்புமுதல் பார்லிமெந்து சபைக்கு வேண்டிய கருவிகள் வரையில் கண்டுபிடித்திருக்கிறார். செல்லரிக்கும் பாச்சைகளைக் கொல்வதற்கான மின்சார யந்திரம் முதல் பார்லிமெந்து சபையில் வோட்டுகள் கணக்கெடுக்கும் மின்சார யந்திரம் வரையில் எத்தனையோ விதம்விதமான சூஸ்திரங்களும் சூக்ஷ்மயந்திரங்களும் கண்டுபிடித்து நிர்மித்திருக்கிறார். இவர் நிர்மித்த இன்னொரு யந்திரம் 8-அடி தூரத்துக்கப்பாலிருந்து மனுஷதேகத்தின் உஷ்ணத்தை உள்ளபடி குறித்துக்காட்டுகிறது. இவர் நிர்மித்த இன்னொரு யந்திரம் ஆடு புல்மேயும்பொழுது புல்கடிக்கும் சப்தம் 6-மைல் தூரத்துக்கப்பால் கேட்கும்படி செய்வதாயிருக்கிறது.

இவர் பேசும்யந்திரம் கண்டுபிடித்தவகை மிகவும் அற்புதமானது. ஒரு சமயம் பேசுந் தந்தியின் பேசுந் துவாரத்தில் (Mouth piece of a telephone) இவர் பாடிக்கொண்டிருந்தார். அப்பொழுது அதிலுள்ள அதிநயமான எஃகு முள் (Fine steel point) அவர் விரலில் குத்தியது. இதிலிருந்து அவர் யோஜனை செய்யத் துவக்கினர். "இந்த முள் அசையும் விதத்தைக் குறித்துக்கொண்டு அதேவிதமாக அதை நான் மறுபடியும் அசையச்செய்யக் கூடு

மானல் அது ஏன் பேசக்கூடாதோ தெரியவில்லை! ஆகையால் அதைப் பரிக்ஷித்துப் பார்ப்பேன்" என்று பரிக்ஷைசெய்ய ஆரம்பித்தார். ஒரு தந்தித் தபால்காகிதத்தில் அந்த முள்ளின் அசைவுபடும்படி யமைத்து "Halloa" என்கிற சப்தத்தை உறத்துப்பேசினர். பிறகு அந்தக் காகிதத்தைப் பின்வாங்கி முன்போல் அந்த முள் அசையும்படி செய்தார். அந்த யந்திரத்திலிருந்து "Halloa, halloa" என்கிற சப்தம் அதி மிருதுவாக வந்தது. இதிலிருந்து பேசும் யந்திரம் ஒன்று செய்யவேண்டுமென்று தீர்மானித்தார். இந்த எண்ணம் உதிக்கவும் இதை நிறைவேற்றுவதில் அவர் சிந்தைமுழுவதுங் கவிந்துநின்றது. எத்தனையோநாள் இராத் தூக்கம் பகல்தூக்கமின்றி இதில் சிந்தைகவிழ்ந்துழைத்தார். அவர் இதற்கென்று புதிதாய் நிர்மித்த ஒரு யந்திரத்தில் "Spezia" என்கிற வார்த்தையைத் திருப்பித்திருப்பிச்சொல்ல அது ஒவ்வொருமுறையும் "Pezia" என்று சொல்லியது. முதலெழுத்தின் சப்தம் விட்டுப்போய் விட்டது. 6-மாதம் தினம் 15-மணி நேரம் இந்த பிசகைத்திருத்த ஊக்கமுடன் விடாமுயற்சி செய்துழைத்தார். கடைசியில் அவர் பொறுமையும் விடாமுயற்சியும் பலித்தது "Spezia" என்கிற ஸப்தம் சரியாகவந்தது. இப்படியாக ஒவ்வொரு எழுத்துக்களும் அக்ஷர ஸப்தங்களும் அந்த யந்திரம் சரியாக உச்சரிக்கும்படிசெய்ய அனேககாலம் தினம் பல மணிநேரம் பாடுபட்டுழைத்தார். கடைசியில் காரியசித்தியடைந்து லண்டனிலுள்ள பளிங்குமாளிகையில் கூடிய ராஜசபையார் 4000-மைலுக்கப்பாலுள்ள எடிஸன் குரலை ஒரு யந்திரத்தில் கேட்டதிசயித்தார்கள். இப்பொழுது இந்த யந்திரம் கடைத்தெருவில் உத்ஸவகாலங்களில் ஓரணா காசுக்கு உலகிலுள்ள ஸங்கீதஸாஹித்திய மஹான்களுடையபாட்டுகளையும், அரசர்கள் இராஜதந்திரிகள் முதலானோருடையபேச்சுகளையும்பாடியும் பேசியும்காட்டி, சாமான்யஜனங்களையும்மகிழ்விக்கிறது.

மிஸ்டர் எடிஸன் ஒன்றுக்கு ஆதாரம் கண்டுபிடித்து அஸ்திபாரம்போட்டுவிட்டால் அப்புறம் அதை முடியாதென்று விடுகிறதில்லை. 20-வருஷங்களுக்குமுன் பார்லிமெந்துசபைக் கமிட்டியார் திர விசாரித்து மின்சார வொளியைப் பிரிக்கமுடியாது என்று தீர்மானித்தார்கள். பின்னுமொருவருஷத்திற்கெல்லாம் மிஸ்டர் எடிஸன் அதைப்பிரித்துக்காட்ட ஒரு சூக்ஷ்மயந்திரமேற்படுத்தி காரியத்தில் அப்படியேசெய்து காட்டிவிட்டார்.

மிஸ்டர் எடிஸன் ஒரு காரியத்தைச்செய்ய ஸங்கற்பித்துக்கொண்டுவிட்டால், அதில் என்ன செலவு நேர்ந்தாலும் சரி, என்னகஷ்டம் நேர்ந்தாலும் சரி, பின்வாங்குவதில்லை. ஒருமுறை ஏதோ ஒரு அபூர்வமான நார் வேண்டியிருக்கிறதென்று அதற்காகத் தகுந்தவர் ஒருவரை இவ்வுலகமுழுவதும் சென்று தேடி எப்படியும் அதைக்கொண்டுவரும்படி செய்யவேண்டுமென்று தீர்மானித்தார். தகுந்த மனுஷன் ஒருவர் அகப்படவே அவருக்குவேண்டிய செலவைக்கொடுத்து உடனே பிரயாணப்படும்படி யனுப்பினர். 12-மாசம் அலைந்து திரிந்து அந்த நார் தேடப்போனவர் திரும்பிவந்தார். "அந்த நார் அகப்படாதா?" என்று மிஸ்டர் எடிஸன் கேட்டுவிட்டு பதில் கூறுவதைக்கேட்க நிற்காமல் போய்விட்டார். அவர் அந்த நார் தேடிக்கொண்டு போயிருந்தகாலத்தில் அந்த ஜாலவித்தைக்காரர் அதற்கு பதிலாக ஒன்றைக்கண்டுபிடித்துக் காரியத்தை முடித்துவிட்டாரென்று இன்னொருவர் அவருக்கு விவரந்தெரிவித்தார். அவ்வளவு சூக்ஷ்மபுத்தியும் சுறுசுறுப்புமுள்ளவர் அவர்.

மிஸ்டர் எடிஸன், பணம், பேர், புகழ், கீர்த்தி இவைகளில் குறைவின்றி உலகப்பிரசித்தராய் விளங்கினாலும், அவர் நடத்தையில் மிகவும் அடக்கமுள்ளவர். ஆர்ப்பாடங்களும் ஆடம்பரங்களும் அவரிடத்தில் சுத்தமாகக்கிடையாது. மகாகீர்த்திமானாகியும், தான் ஆதியில் ஏழைப்பையனாயிருந்து சமாசாரப்பத்திரிகை விற்று கஷ்டஜீவனம் செய்ததை ஒருபோதும் மறக்காது நினைத்துவருகிறார். நியூயார்க் நகருக்கருகில் க்ளென்மான்ட் (Glenmont) என்னும் அவருடைய வாசஸ்தலம் மிகநேர்த்தியானதாயினும் அங்கு அவர் அதிகமாய் வசிப்பதில்லை. வேலைச்சாலையிலேயேயிருந்து வேலைசெய்வதிலேயே தம் காலத்தைப்போக்கிவருகிறார். அவர் இருமுறை விவாகம் செய்துகொண்டார். உலகத்துக்கு அவரைப்போல உபகாரம் செய்தவர் வேறுயாருமில்லை. ஆயினும் அவர் பூர்வகாலத்து இருஷிகளைப்போல கர்மயோகியாய் அவருடைய வேலையாச்சிரமத்திலே வசித்துவருகிறார். ஏழைஜனங்களும் அதிகச்செலவின்றி மின்சார வெளிச்சம் அவரவர் வீடுகளிலுபயோகித்து வரசௌகர்யத்துக்காக ஒரு நூதன யந்திரம் கற்பிதம்செய்யக் கருதியிருக்கிறாரென்று தெரியவருகிறது. அவரைப்போலொத்த மகான்கள் உலகத்துக்குபகாரிகளாக அவதரித்து ஜனங்களுடைய க்ஷேமவிர்த்தியைநாடியுழைப்பதே நோன்பாகக்கொண்டு உண்மையான கர்மயோகத்திலிருந்து காலந்தள்ளி தங்களுடைய அவதார மகிமையினால் உலகத்தை முன்னினுமதிகமாக விர்த்தியடையச்செய்து பூஜிதர்களாகப் போகிறார்கள். இவர்கள் புண்யாத்மாக்களே யென்பதிற் சந்தேகமில்லை.

---

## THE ILIAD OF HOMER.

### ஹோமர் என்னும் மகாகவிபாடிய

# இலியயுத்தம்.

### முதற்காண்டம்.

(234-வது பக்கத் தொடர்ச்சி.)

அகமம்னனுக்கும் அக்கிலனுக்கும் பிணக்கம்.

வேறு.

88. ஆண்டவர் சினத்தைத்தீர்ப்பா னறிவினு லனுபோகத்தால்
மாண்டநற் குணத்தால்வாக்கின் வலிமையால் வலியனாகி
நீண்டபல் பகல்கள்கண்ட நெத்தரென்ப வனெழுந்து
வேண்டுறு மொழிகணற்றேன் பொழிந்தென விளம்பலுற்றான்.

(இ-ள்.) அப்போது அவ்விருவருடைய கோபத்தையும் தணிக்கும்பொருட்டு, அறிவாலும் அனுபவத்தாலும், சிறந்த குணங்களாலும் வாக்சாலகத்தினாலும் மிக்க சிறப்புடையோனாகி மிக்க வயோதிகனாகிய நெத்தர் என்பவன் அவர்களை நோக்கித் தேன்பொழிந்ததுபோலும் இனிய வசனங்களால் சொல்லத்தொடங்கினான்.

89. உறற்குள கேடியாதோ வொன்னாவ ருவகையெய்தச்
சிறப்புறு திறல்சேர்வென்றி வேந்தர்காள் சினக்கொண்டிங்ஙன்
வெறுப்புறப் படுவதான பகைவினை விளைத்திரந்தோ
மறுக்கலி ரென்றன்மாற்றம் மாற்றுவி ரிதனையின்றே.

(இ-ள்.) நமக்கு யாது கேடுவருதற்குள்ளதோ? உங்களுக்கு இவ்வாறு புத்திகெட்டுப்போயிற்று. நம் பகைவர் சந்தோஷிக்க நீங்கள் இவ்வாறு ஒருவரையொருவர் கோபங்கொண்டு பகைக்கின்றீர்கள். இனிமேலாயினும் என்சொல்லைத் தட்டாமல் உங்கள் பகையை விட்டுவிடுங்கள்.

90. வானவர் தமையேமானும் வலிகெழு வீரர்தம்மை
யானறிந் துள்ளேன்மேனா ளெறுழ்வலி யவர்க்குநேராம்
மானவேல் வீரர்தம்மை மகிழ்வுறக் காண்பதுண்டோ
நானினி யிருகண்ணார நளிர்கட லுலகின்கண்ணே.

(இ-ள்.) தேவர்களுக்குச்சமானமான பராக்கிரமத்தையுடைய வீரர்களை என் கண்ணால் எத்தனை பேர்களையோ பார்த்திருக்கிறேன், அவர்களுக்கொப்பானவர் இனி இவ்வுலகத்தில் உண்டாகப்போகிறதேயில்லை நான் காணப்போகிறதும் மில்லை,

91. புகழ்மலி பிருதனாண்மைப் பொருவில்சீர் தரையனென்றும்
நெகிழ்தலில் பெருமைவாய்ந்த செனியனீள் வலியிற்குன்றாத்
தகையுறு தசியனோங்கு பொலிவிமன் சாற்றுமேனைத்
தொகையுறு வீரர்க்கொப்பாச் சொல்லவின் றுலகிலுண்டோ.

(இ-ள்.) புகழ்மிகுந்த பிருதனென்ன, பராக்கிரமத்தில் தனக்கொப்பில்லாத சிறப்புடைய தரையனென்ன, எந்நாளும் குறையாத பெருமையையுடைய செனியனென்ன, வலிமிகுந்த தசியனென்ன, மேன்மைபெற்ற பொலிவிமன் என்ன, இன்னம் இவர்களைப்போன்ற எண்ணிறந்த வீரர்களை யான் கண்டிருக்கிறேன். அவர்களுக்கொப்பான வீரர்கள் இக்காலத்தில் உலகில் இல்லையேயில்லை.

92. இனையராம வீரரோடி யானிளமையிலினிதுகூடி
முனைவரு தொழில்பயின்று முயலுறு நலத்தால்வெல்ல
நனைவுறு நெஞ்சம்தூண்ட நிகரறு புகழ்ச்சிநல்கும்
வினையினில் விழைவுணர்ந்து மிகவுமுட் களித்துளேனால்.

(இ-ள்.) இப்படிப்பட்ட அநேக வீரரோடு சேர்ந்து நானென் பாலியகாலத்தில் போர்த்தொழில் பயின்று ஒருவரையொருவர் சற்காரியங்களில் வெல்லவேண்டி நெஞ்சில் ஆசைகூர்ந்து ஒப்பற்ற புகழைத் தருவனவான காரியங்களை விரும்பிச் செய்திருக்கின்றேன்.

93. குன்றிடைத் திரிந்துங்கானிற் கொடியவல் விலங்கைக்கொன்றும்
பன்றியைச் செகுத்துச்செந்நீர் கானெலாம் பாயச்செய்தும்
சென்றுளை செறிந்தவெய்ய நரப்பரி சிதைத் தும்வேறும்
வென்றிசேர் வீரச்செய்கை யெத்தனை விளைத்துளேமால்.

(இ-ள்.) மலைகளில் திரிந்தும், அநேக கொடிய விலங்குகளைக்கொன்றும், பன்றிகளைக்கொன்று அவற்றின் உதிரத்தாற் கானமெல்லாம் செவக்கச்செய்தும், பிடரிமயிர் நெருங்கிய கொடிய நரப்பரிகளைக் கொன்றும் இன்னமும் இவ்விதமான விளையாட்டுச் செய்கைகள் எவ்வளவோ செய்திருக்கிறோம்.

94. இத்தகை விறல்சேர்வீர ராயினு மியம்புமென்றன்
புத்தியை யினிதுபோற்றிப் புகழுறப் புரிவாரன்றி
எத்திறத் தானுமென்சொற் கடப்பரோ கடவார்யானும்
வைத்தவென் மதிவலத்தா லென்வழிப் படுப்பேன்மாதோ.

(இ-ள்.) இவ்வளவு பராக்கிரமசாலிகளாயினும் அவ்வீரர்கள் நான் சொல்லும் புத்திமதிகளை யன்போடேற்றுப் புகழ்ச்செய்கைகளைச் செய்வார்களேயன்றி எவ்வாற்றானும் நான்சொல்லும் வார்த்தைகளை மீறுவார்களோ ஒருபோதும் மீறவேமாட்டார்கள். நானும் என்னுடைய புத்தி சாமர்த்தியத்தாலே, அவர்களை என்னிச்சைப்படி இணங்கி நடக்கச்செய்வேன்.

95. இளமையிற் றானுமென்னை யினையவ ரறிவின்றாய
வளமையிற் சிறந்தானென்று மதித்தன ராயின்வாலைத்
தளர்வறு பருவத்துற்ற வீரர்காள் தள்ளலாமோ
வினையுமென் முதுமைதன்னில் விருப்பினுற்றருசமன்சொல்லை.

(இ-ள்.) என்னுடைய பாலியகாலத்திலும்கூட இவ்வீரர்கள் இவ்வாறு என் புத்திசாதுர்யத்தைக் கண்டு என்னைக் கௌரவிப்பார்களாயின், பாலியர்களாகிய நீங்கள் இப்போது என் முதுமைப்பருவத்தில் தருகின்ற புத்திமதிகளை யேற்றுக்கொள்ளாமல் தள்ளிவிடுதல் உங்களுக்கு நியாயமாகுமா.

(இன்னும் வரும்.)

எஸ், முத்து ஐயர், பி. ஏ.

---

## * THE MADRAS HINDU ASSOCIATION.

## சென்னை ஹிந்து ஸமாஜம்.

இந்த வருஷம் முதல்-தேதியன்று பிரபலமாய்க் கூட்டங் கூடிக் கொண்டாடப்பட்ட சென்னை ஹிந்து ஸமாஜத்தின் நோக்கங்கள் விதிகளும் அதைக் கொண்டாடக்கூடிய முதற் கூட்டத்தில் ஜஸ்டிஸ் ஸர். எஸ். சுப்பிரமணிய ஐயர், ராவ்பஹதூர் எம். இரங்காசாரியர், மிஸ்ஸஸ் அன்னிபெஸன்ட் அம்மாள், இவர்கள் செய்த பிரசங்கங்களின் ரிபோர்ட்டுமடங்கிய சிறு புஸ்தகமொன்றும், ஹிந்துதர்மவழிபற்றி ஹிந்து ஜனசார சீர்திருத்தங்கள் செய்யவேண்டியதைக் குறித்து ராவ்பஹதூர் எம். இரங்காசாரியர் எழுதிய சிறு புஸ்தகமொன்றும் நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இவ்விரு சிறு புஸ்தகங்களிலடங்கிய விஷயங்களைப்பற்றி நாம் பல தடவைகளிலும் பன்னிப் பன்னி யெழுதியிருக்கிறோம். இப்பொழுது முக்கியமாய்க் கவனிக்கவேண்டிய தென்னவெனில் "சென்னை ஹிந்து ஸமாஜ"த்தின் நோக்கத்துக்கும் ஊக்கத்துக்குமுள்ள தாரதம்மியமேயாம். நோக்கம் மிகப் பெரிதாகவும், ஊக்கம் மிகச் சிறிதாகவுமிருக்கிறதென்று எதிர்க்ககூறியார் முறையிடுகிறார்கள். முதல் முதல் எந்த சபையல்லது ஸ்தாபன மேற்பட்டாலும் நோக்கத்துக்குத்தக்க ஊக்கமிருப்பதாகப் பார்ப்போருக்குப் படாது. ஆனால் ஊக்கத்தின் அளவும் ஆடம்பரத்தை யொட்டியதாக மட்டுமில்லை. ஊக்கமின்றி யாடம்பரங்களிருக்கலாம். அப்படியே ஆடம்பரமின்றி ஊக்கமுமிருக்கலாம். இரண்டும் சமனாய், ஊக்கத்துக்குத்தக்க ஆடம்பரமும், ஆடம்பரத்துக்குத் தக்க ஊக்கமுமிருப்பது விசேஷமாம். ஆனால் இத்தொல்லுலகில் எதுவும் எடுத்ததும் பூரணமாக விளங்குவதில்லை. எல்லா விர்த்தியும் சிறுகச்சிறுகவேதோன்றும் வளர்ச்சி கிளர்ச்சியின்பலனும். ஆகையால் எம்முயற்சியையும் அவசரப்பட்டு 'இது

* 1. The Madras Hindu Association, its aims & objects & an account of its inaugural meeting. 2. Hindu Social Reform on National lines, by Kao Bahadoor M. Rangachariar, M. A. G. A, Natesan & Co., Printers, Esplanade.

பயன்படா முயற்சி'யென்று பகர்தலாகாது. உள்ளம் உண்மையிற்பற்றி நின்றால் எவ்வகையானும் "முயற்சி திருவினையாக்கும்" என்பது சத்தியம். உள்ளம் உண்மையிற்பற்றாது வெளியாடம்பரத்தில் மட்டும் பற்றுவைத்து பகட்டுக் குழைப்பதாயின், அம் முயற்சி விழலுக்கிறைத்த நீர்போல் வீணில் கழியும். ஆகையால் ஹிந்து ஸமாஜத்தின் பலா பலன்களைப் பற்றிச் சிந்தித்துத்தீர்மானம் சொல்ல இன்னம் காலம் முந்தவில்லை யென்பதை அதைப்பழிப்பவர்கள் மனதில் வைக்கவேண்டும்.

இந்த ஸமாஜத்தின் நோக்கங்கள் நாலு: இவைகள் சித்திக்க இவர்கள் அனுஷ்டிக்கக் கருதும் மார்க்கங்கள் பதினொன்று. இவைகளைச் சுருக்கமாய் இங்கு வரைவோம்:—

நோக்கங்கள்:—

i. பூர்வந்தொட்டுள்ள புராதமான ஹிந்து நாகரிகவுண்மைக்கு ஒத்தவிதமாக ஹிந்து ஜனமதாசாரங்கள் விர்த்தியடைந்துவர ஆதாரமாயிருத்தல்.

ii. ஹிந்து ஜன ஸ்வதர்ம பரிபூரணத்துக் குதவியாக அந்நிய நாகரிகங்களில் மேலாகவுள்ளவற்றையெல்லாம் ஹிந்து ஜனங்கள் ஸ்வீகரித்து ஸ்வதர்மானுஷ்டான ரீதியாக அவைகளைக்கையாண்டு பழகிக் கடைத்தேறும் பொருட்டு பல பாகங்களும் பொருந்த வமைக்கப்பெற்ற கருவிகரண ஆத்மக விர்த்திபயக்கும் வித்யாமுறையை அனுஷ்டானத்துக்குக் கொண்டுவருதல்.

iii. ஹிந்துஜன மதஸ்தாபனங்கள் சம்பந்தமாய் காலதேச வர்த்தமானங்களுக்கிசைய வேண்டிய மாறுதல்கள்செய்து விர்த்திக்கு ஆஸ்பதமான வழி தேடல்.

iv. ஹிந்துஜன ஐக்கியத்துக்கு விரோதம் விளைக்கும் விர்த்திகள் எதுவாயினும் அதை யெதிர்த்து நின்று ஹிந்துஜன ஐக்கியத்துக்கும் ஒருமைக்கும் பங்கம் வராது காப்பாற்றலும், ஹிந்துஜனப் பிரிவுகளுக்குள் உள்மானமும் உண்மைப் பிரகாசமும் விளங்கச்செய்து ஹிந்துஜன ஐக்கியத்தையும் ஒருமையையும் ஸ்திரப்படுத்தலுமாம்.

இதற்கு வழிவகைகள்:—

1. 'Hindu ideals of life and conduct'— ஹிந்துக்கள் தங்களுக்கே சொந்தமெனக் கொண்டாடும் பூரணமான ஸத்யம் ஸன்மார்க்கம், இவைகளைப்பற்றி ஜனங்கள் சரியான எண்ணங்கள் கொள்ளும்படி அவைகளைப்பற்றி யெழுதியும், போதித்தும், பிரசங்கித்தும் இன்னும் பலவகைகளாலும் நல்லறிவு பரவச்செய்து ஜனசமூக விர்த்தியை நாடியுழைத்தல்.

2. ஹிந்துக்களுடைய புராதனமான பூரணக் கொள்கைகளுக் கிசையவும் இக்காலத்துக்குப் பொருந்தவும் ஹிந்துப்பெண்களையும் ஸ்திரீகளையும் வித்யாமுறையில் பழக்குதல்.

3. (a) பண்டிதர் புரோஹிதர்களை இக்காலத்துக்கேற்றபடி பழக்குதலும், (b) பண்டிதர்களும் இங்கிலிஷ் கற்றவர்களும் சேர்ந்த சபைகூட்டி இந்த ஸமாஜத்தின் நோக்கத்தை முன்னுக்குக்கொண்டு வருவதும்.

4. ஹிந்துஜன சமூகத்தில் கடையோர் கீழோராயுள்ளவகுப்பாரை தர்மகைங்கரியார்த்தம் அவர்களுக்குழைத்து முன்னுக்குக் கொண்டுவர முயற்சித்தல்.

5. ஹிந்துக்களால் ஏற்படுத்தப்பட்ட எல்லா கலாசாலைகள் ஸ்கூல்களிலும், கவர்ன்மெண்டாரால் ஏற்பட்டுள்ளவைகளிலுங்கூட மதக்கல்வி பயிற்றுவிக்கச்செய்யவேண்டியது.

6. ஹிந்துமதப் பிரஷ்டர்கள் தங்கள் பிசகையறிந்துவருந்தி திரும்பவும் ஹிந்துஜன சமூகத்துக்குத் திரும்பவேண்டில் அவர்களைச் சேர்த்துக் கொள்ளவும், அதற்குவேண்டிய மதக்குரவர் அனுமதிபெறவும் முயற்சித்தல்.

7. அநாதைகளாகவிடப்பட்ட ஹிந்துக்குழந்தைகளை ஹிந்துக்கள் கொண்டாடும் பூரணமான ஸத்ய ஸன்மார்க்கக் கொள்கைகளுக் கிசைய அவர்களைப் போஷித்து வளர்த்துவர வழிதேடல்.

8. விவாகச்சீர்திருத்தம்.— ஹிந்துக்கள் இது விஷயத்தில் கொண்டாடும் பூர்ணக்கொள்கையாம் ஆத்மவிவாக, ஸம்ஸ்கார தர்மத்துக்குப் பங்கம் வாராம

லும், விவாகசம்பந்தத்தாலெழும் தடுக்கக்கூடிய துன்பங்கள், துக்கங்கள் இவற்றைக் கூடியவரையில் குறைக்கவும் வழிதேடியுழைக்கவேண்டும். ஹிந்து ஸ்திரீ புனர் விவாகத்தைப்பற்றி இந்த ஸமாஜத்தார் பலகாரணங்கள் நிமித்தம் ஸமாஜமுறையில் ஏதும் சொல்ல சாத்தியமில்லாதவர்களா யிருக்கிறார்கள். ஆனால்,

(a) பாலப்பிராயத்திலே ஹிந்துப்பெண்களுக்கு வைதவ்யம் நேரிடுவதைத் தடுக்கும்படியாக விவாக வயசையும் பாணிக்கிரஹணகாலத்தையும் சிறுகச்சிறுக உயர்த்த முயற்சிக்கப்படும்.

(b) வதூவரஸொல்கம் கொடுப்பது கூடாதென்று தீடுக்க முயற்சிக்கப்படும்.

(c) விவாகச் செலவுகளைக் குறைத்து விவாக சடங்குகளை சுலபமாகச் செய்யவேண்டும்.

9. ஹிந்து விதவைகளுக்கு வித்யாப்பியாசம் செய்வித்து பரோபகாரவழிகளில் அவர்கள் ஸ்வதர்ம வழி விலகாது ஜன க்ஷேமத்துக்குழைத்துவரப் பழக்குவதற்குவேண்டிய ஸ்தாபனங்களேற்படுத்தல்.

10. மதவழி ஜீவனவழியில் பிரஷ்டர்களாகாது அந்நியதேசங்களுக்குப் போய் வந்த ஹிந்துக்களை ஹிந்து ஜனசமூகத்தில் சேர்த்துக்கொள்ள உதவி புரிதல்.

11. சதுர்வர்ணத் தாரிலுமுள்ள உட்பிரிவு வகுப்பார்கள் ஒருவரோடொருவர் பந்திபோஜனம்செய்து, கொண்டுகொடுத்து விவாகம் செய்துகொள்ளல் சாத்தியமாகச்செய்வது.

இந்நோக்கங்களையும் வழிவகைகளையும் வாசித்துச சிந்திப்போர் மனதில் ஒரு உண்மை உள்ளபடி விளங்கல் வேண்டுமென்று கருதுகிறோம்.

இச்சஞ்சிகையின் இரண்டாவது விஷயத்தின் தலைப்பெயரை யொட்டி அவ்வுண்மையை உள்ளபடி அடிக்குறிப்பில் இங்கிலீஷில் வரைந்திருக்கிறோம்.* அது என்ன வெனில்.—சென்ற 19-ம் நூற்றாண்டில் ஐரோப்பியாது மனோவிர்த்தியை ஆராய்ந்தெழுதிய ஒருவர் 'அதற்குமுன் நூற்றாண்டின் மத்தியில் நேர்ந்த 'Revolution' என்னும் பெரிய மாறுதல் நேர்ந்தது முதல், புத்திவிர்த்தியே பிரதானமாக நாட்டப்பட்டுவந்தது. அதனாலுண்டான மனக்கலக்கமும் அது காரணமாயுண்டான ஜனக்குழப்பமும் நீங்க, சென்றநூற்றாண்டில் இரண்டு நூதன வழிகள் ஏற்பட்டுவிர்த்தியாய்வருவதுஸ்பஷ்டமாய் விளங்குகிறது' என்று சரித்திர பூர்வகமாயாராய்ந்துணர்ந்து வரைந்திருக்கிறார். 'நாரதர்கலகமாம்' விஞ்ஞான விர்த்தியினாலுண்டாகும் கெடுதலைமாற்ற, ஆதாரப்பற்று, ஆத்மானுபவப்பற்று என்று இருவித நூதனப்பற்றுகளுண்டாய் விர்த்தியாய் வருவதாகச் சொல்லியிருக்கிறார். ஆதாரப்பற்று இங்கு சாஸ்திரப்பற்றாக விளங்குகிறது. ஹிந்துஜனசமாஜம் போன்றவை இதற்கு உதாரணமாம். ஆத்மானுபவப்பற்றுக்கு உண்மையான உதாரணம் ராமகிருஷ்ணமிஷன் போன்றவையாம். பிரார்த்தனை ஸமாஜம், பிரம்மஸமாஜம் போன்ற இவையெல்லாம் ஆத்மானுபவ வழிபற்றிச்செல்ல முயன்று பாதிவழியில் 'கரைதட்டி நின்ற கப்பல் போல்' தடைப்பட்டுப் போனவைகளாம். ஆரிய தர்ம மஹாமண்டலி, ஹிந்து ஸமாஜம் போன்ற (revivalist movements) பூர்வாதாரப்பற்றுக்கொண்டுழைக்கும் ஸ்தாபனங்களும், மடங்கள், மதக்குரவர்கள் போன்ற பூர்வஸ்தாபனங்களும் ஆதாரப்பற்று என்னும் கொள்கை வழிபற்றி யுழைப்பனவாம். இவ்விரண்டும் ஒன்றுக்கொன்று ஆதரவாக விருந்துழைத்துவருவது தேச க்ஷேமத்துக்கும் ஜன க்ஷேமத்துக்கும் சுகிர்தமாம். இந்த உண்மைபற்றியே ஸர். எஸ். சுப்பிரமண்யஐயர், மிஸ்ஸஸ் பெஸன்ட் முதலானவர்கள் ஹிந்து ஸமாஜத்துக்கும் ஆசாரச்சீர் திருத்த சபைக்கும் போட்டியில்லையென்று செப்பியர். இந்நோக்கங்கொண்டே 1903-ம் ௵ ஜனவரி ௴ 1௳ யன்று 'ஆனந்தாமிஷன்' என்னும் 'ஸத்யானந்த சபை'யேற்படலாயிற்று. அது ஆத்மானுபவ வழி பற்றியுழைக்கக்கருதியதால் வெளியாடம்பரங்கள் வேண்டாமென்று உண்மைக்கு உதாரணமாக விருந்துழைத்துவரத் திருவருட்பிரகாசத்தை நம்பித் தீர்மானிக்கலாயிற்று. இந்த நம் நோக்கத்தையுணராமல் ஹிந்துஸமாஜத்தார் நம்மை ஆசாரச்சீர்திருத்தக் கக்ஷியைச் சேர்ந்தவரென்றும், ஆசார்ச்சீர்திருத்தக் கக்ஷியார் பூர்வஹிந்து (Revivalists) மதப்பற்று

* *Vide*, Footnote p. 324.

வைத்துழைப்பார் கக்ஷியைச் சேர்ந்தவரென்றும் நிராகரித்து நம்மிடத்தில் குற்றங் கூறுகிறார்கள். நாம் ஒரு கக்ஷியையும் சேர்ந்தாவது சேரவாவது இல்லை. ஸத்தியம் ஒன்றே கதியென்று நம்பியுள்ளோம். நமக்கு ஸத்யமேகதி, ஸத்யமேவிதி, ஸத்யமேவழி. "ஸத்யமேவஜயதி" என்பது நமது உண்மையான உள்மதக்கொள்கை. இதையே பிடியாகப் பிடித்து ஸத்குருவாம் நடராஜ மூர்த்தியைத்தியானித்து இந்த 15- மாதங்களாக வுழைத்து வருகிறோம். நமது கொள்கையையும் நோக்கத்தையும் இச்சஞ்சிகையின் முதலில் "தன்னை வென்றவன் தலைவனாவான்" என்னும் தலைப்பின் கீழ் கவர்னர், கவர்னர்-ஜனரல், வித்யா இலாகாத்தலைவர் இவர்கள் மனோவாக்குக்குப் பொருந்தப் பின்னுமெடுத்து விளக்கியிருக்கிறோம். அதை யெல்லா ஹிந்துக்களும் கவனித்துப் படிப்பதோடு இதரர்களுக்கும் எடுத்துக்காட்டி வற்புறுத்தக்கோருகிறோம்.

---

## ருஷியா—ஜப்பான்யுத்தம்.

ருஷியா-ஜப்பான் யுத்தம் இன்னும் நடந்து வருகிறது. ஆனால் இருதரத்தாருக்கும் சென்ற மாசம் குறித்ததைவிட பலமானசண்டை தரையிலாகிலும் சமுத்திரத்திலாகிலும் இன்னும் நடக்கவில்லை. இருதரத்தாரும் சண்டைக்கு வேண்டிய முஸ்தீப்புகள் செய்து சைனியங்களை அங்கங்கேயனுப்பிவந்தாலும் விவரம் வெளிவராதபடி இரகஸியமாகக் காப்பாற்றி வருகிறார்கள். ஜப்பானியர் சமுத்திரத்தில் வலுத்தகையாகவேயிருக்கிறார்கள். ருஷியர்களுக்கு அந்தப் பக்கத்தில் இரண்டு முக்கிய துறைமுகங்களிருக்கின்றன. ஒன்று போர்ட் ஆர்தர், மற்றொன்று 'வ்லாடிவோஸ்டக்' என்னும் பேருடையது: வடக்கேயிருக்கிறது. அங்கே சமுத்திரம் பனியாலுறைந்து போய் கப்பல்கள் போகக்கூடாதபடி சில மாதங்கள் நேரிடுமாம். இப்பொழுது அங்கே உறைப்பனிள்ளாம். போர்ட் ஆரிதலுள்ள 13-ருஷியப் போர்க்கப்பல்களில் 8-சேதமடைந்து துறைமுகத்துக்குள் சண்டைக்குதவாமல் தங்கிக்கிடக்கின்றன. இன்னம் 5-கப்பல்களிருப்பதில் இரண்டொன்று ஒருவாறுசேதப்பட்டிருப்பதாக வதந்தி. இப்படியாக ருஷியர்களுடைய கப்பல்சைனியம் மிகவும் பலங்குறைந்து போயிருக்கிறது. வடக்கேயுள்ள 'வ்லாடிவோஸ்டக்' என்னும் துறைமுகத்தில் 5-ருஷியக் கப்பல்களிருப்பதாகவும் அதில் இரண்டு சேதப்பட்டு முழுகிப்போனதாகவும் சொல்லப்படுகிறது. மார்ச்சுமீ 6உ ஞாயிற்றுக்கிழமையன்று ஜப்பானியர் கப்பற் படைகள் 'வ்லாடிவோஸ்டக்' துறைமுகத்துக்கு 5-மைல் தூரத்தில் நெருங்கி துறைமுகப் பட்டணத்தைத் தகர்க்க உத்தேசித்து 200-குண்டுவெடிகள் தீர்த்தார்களாம். ஆனால் இவைகளொன்றும் பட்டணத்தில் விழுந்து வெடிக்கவில்லையாம். கோட்டை கொத்தளங்களுக்காவது ஜனங்களுக்காவது விசேஷ சேதம் ஒன்றும் நேரிடவில்லை. அப்போது ருஷிய கப்பல்கள் அங்கே துறைமுகத்திலில்லையாம். பிறகு அவைகளோடு சண்டை நேரிட்டிருக்கவேண்டுமென்று ஊகிக்கப்படுகிறது. ஆனால் சமாசாரம் ஒன்றும் கிட்டவில்லை. ஜப்பானியர் போர்ட் ஆர்தர் துறைமுகப் பட்டணத்தையும் தாக்கினார்களென்றும் ஆனால் அதனால் ஒரு சேதமும் விளையவில்லையென்றும் தெரிகிறது. 'வ்லாடிவோஸ்டக்' துறைமுகப்பட்டணத்திலுள்ள ஜனங்கள் அத்துறைமுகப்பட்டணத்தைவிட்டு உள்நாட்டுக்குள் தங்கள் குடும்பசகிதம் ஏராளமாகப் போய்க்கொண்டிருக்கிறார்கள். அங்கே குழப்பம் மிகுதியாகி ஜனங்கள் இருக்க சம்மதிக்காமல் ஓடிப் பிழைக்க யத்தனிக்கிறார்கள். இருப்பவர்களுக்கும் அகவிலை அநியாயமாக உயர்ந்துவிட்டபடியால் ஜீவனத்துக்குக் கஷ்டம் அதிகமென்று தெரிகிறது. சீக்கிரத்தில் அப்பட்டணம் காலிசெய்யப்படுமென்று தெரியவருகிறது. போர்ட் ஆர்தர் துறைமுகத்திலுள்ள ருஷிய படைகளும் ஜீவனத்துக்கு வழியின்றித் தவிக்க நேரிடுமென்றுதோன்றுகிறது. கடல்வழியாக ஏதும் சாமான்கள் அவர்களுக்குக் கிடைக்காதபடி ஜப்பானியர் காவல்வைத்து பந்தோபஸ்து செய்திருக்கிறார்கள். பட்டணவாசிகள் பயந்தோடுவதாக சமாசாரம். ருஷியாவிலிருந்து மஞ்சூரியா ரயில்மார்க்கமாய்த்தான் அவர்களுக்கு ஆகாரமும் சைனியஉதவியும் கிடைக்கவேண்டும். ஆனால் ருஷிய கவர்ன்மெண்டு ஏற்பாடுகள் ஊழல்பட்டுக்கிடப்பதால் கவர்ன்மெண்டார் செய்யுமுயற்சி சரியாகப் பலிப்பதில்லை.

ருஷிய் கவர்ன்மெண்டார் லக்ஷம்பவுண்டு நிலக்கரி வாங்க உத்தரவுசெய்து அதற்கு வேண்டிய பணமும் கொடுத்திருக்க 40-ஆயிரம் பவுண்டு நிலக்கரிதான் வந்ததாம். பாக்கி போனவழி வந்தவழி யொன்றும் தெரியவில்லை. ருஷியாவிலிருந்து ஸைபேரியன் ரயில்வேமார்க்கமாய் போர்முகத்துக்கு தளவாடங்களும் சாமான்களுமனுப்பியவை போனவிடம் வந்தவிடம் தெரியாமல் குழம்பிக்கொண்டு கிடக்கிறார்கள். கவர்ன்மெண்டுத்தியோகஸ்தர்கள் 'எரிகிறவீட்டில் பிடிங்கினது லாபம்' என்று சண்டைக்குழப்பத்தை சாக்கிட்டு வேண்டியமட்டும் சுயலாபத்தை நாடி அட்டூழியம் செய்துவருகிறார்களென்று தெரியவருகிறது. மஞ்சூரியாவழியாக வரும் ரயில்வே முற்றும் பந்தோபஸ்துக் குறைவாயிருப்பதாகவும், வழியில் அனேக இடங்களில் அந்த ரயில்வேய்க்கு ஆபத்து நேரிடுவதாயிருப்பதைத் தடுத்துவருவது ருஷிய அதிகாரிகளுக்கு மிகவும் கஷ்டமாயிருக்கிறதென்றும் தெரியவருகிறது. ருஷியர்கள் இப்படி தட்டுத்தடுமாறிக் குழம்பிக்கொண்டிருக்க ஜப்பானியர் அதிசாமர்த்தியத்தோடு சேனைகளை முக்கியமான இடங்களில் கொண்டுபோய் இரகஸியமாய்ச் சேர்த்து சண்டைக்கு வேண்டிய முயற்சிகளெல்லாம் வெகு மும்மரமாகவும், சமுக்கமாகவும் நேர்மையாகவும், சட்டதிட்டமாகவும் செய்துவருகிறார்கள்.

ருஷியாவுக்குள்பட்ட இராணுவ உத்தியோகஸ்தர்கள் 'எரிகிறவீட்டில் பிடிங்கினதுலாபம்' என்று நினைக்கிறவர்களாகவிருக்க, ஜப்பானியர்கள் தேசாபிமானம் நிறைந்து, இராஜவிசுவாஸம் பொங்க அதியுற்சாகத்தோடு தங்கள் உடல் பொருளாவியையும் திரணமாயெண்ணி தங்கள் தேசத்தின் கௌரதைக்காக பிராணனை விடுவது பெருங் கீர்த்தியென்று நம்பி, சாவுக்கு அஞ்சாமல், அதிக துணிச்சலோடும், சாந்தம், சாமர்த்தியம், திடம், வைராக்கியம் முதலிய சற்குணங்கள் மேலிட்டவர்களாய் வெகு திடமாகவும் புத்தியுத்தியோடும், பகைவர்களை மடக்கி யடிப்பதற்கு வேண்டிய உபாயங்களெல்லாம் தேடி வெற்றிக்குவேண்டிய வழிகளில் ஒன்றும்விடாது பார்த்துக்கொண்டு போரை நடத்திவருகிறார்கள். ஜப்பானியர்கள் மஹா புத்திசாலிகள். இயற்கையாகவே திடமும் தைரியமும் வாய்க்கப்பெற்றவர்கள். அவர்கள் தேசத்தில் எரிமலைகளும் பூமியதிர்ச்சியும் அடிக்கடி யுண்டாகி ஊர்கள், மலைகள், ஒருநாளில் நிலம் வெடிக்க அதில் காணுமல் மறைந்துபோவது சகஜமாதலால், அவர்கள் சாவுக்குத் துணிந்தவர்களாயிருக்கிறார்கள். உயிரைத் திரணமாக நினைக்கப்பட்டவர்கள். இராஜவிசுவாசமும் தேசவிசுவாசமும் பெரிய பூஷணமாகப் பாராட்டிப் பழகியவர்கள். அவர்களுடைய நற்குணங்களெல்லாம் இந்த யுத்தசமயத்தில் ஒளிவிட்டுப் பிரகாசிக்கின்றன. அவர்கள் 1868-ம் வருஷம் முதல்தான் சீர்திருந்த ஆரம்பித்தார்கள். ஐரோப்பிய அமெரிக்காதேசத்து நாகரிகங்களைப்பார்த்துப்பழகி அனுஷ்டிக்கக் கற்றவர்களானதால், அவர்கள் இந்த 35-வருஷகாலத்தில், அதுவும் விசேஷமாகச்சென்ற 12 - வருஷங்களுக்குள், ஐரோப்பிய அமெரிக்காதேசத்தார்க் கிணையானவர்களாகத் தங்களைச் சீர்திருத்திக்கொண்டுவிட்டார்கள். 1890-ம் வருஷத்தில் ஜப்பானுக்கு பார்லிமெந்துசபை யேற்பட்டது. அங்கிலேய பார்லிமெந்து சபயைப்போல் ஜனப்பிரதிநிதி துரைத்தனம் அத்தேசத்தில் இப்பொழுது வெகு நேர்மையாக ஏற்பட்டுவிட்டது. ருஷியாவோடு சண்டை யாரம்பித்து, யுத்தச்செலவுக்குப் பணம் வேண்டுமென்று தெரிந்ததும் ஜப்பானிய ஸ்திரீகள் தாங்களாக தங்கள் நகைகளையெல்லாம் கவர்ன்மெண்டு யுத்தநிதிக்குபயோகப்பட அனுப்பிவிட்டார்களாம். பிரபுக்கள் தனவந்தர்கள் தங்கள் நிதிக்குவியல்களையெல்லாம் திறந்து கவர்ன்மெண்டுக்கு நிதிசேகரமாகக் கொடுத்துவருகிறார்களாம். இந்த யுத்தத்தில் ருஷியர்கள் தோல்வியடைந்தால், கீழ்த்திசையில் அவர் இராஜ்ஜியம் நிலைக்காது விழுந்துபோமென்று நம்பக்கூடியதா யிருக்கிறது. ஆனால் இந்த ருஷியர்களோ ஐரோப்பாவிலுள்ள தேசங்களெல்லாவற்றிலும் விஸ்தீரணத்திலும் ஜனத்தொகையிலும் அதிகாரத்திலும் வலுத்தவர்கள். ஜப்பானியர்களோ அவர்களோடொப்ப பார்க்குமிடத்தில் ஒரு சிறுதேசத்தார். ஆனால் இவர்கள் அதிகாரபலம் ஜனங்கள் ஹிருதயத்தில் வேரூன்றி நிற்க, ருஷியர்களுடைய அதிகாரம் குடிகளை வதைக்கும் ஏகாதிபத்தியத்தைச்சார்ந்ததாயிருக்கிறது. பிரஜைகளினுடைய அன்பின்றி அரசன் பலம் என்னத்திற்காகுமென்பதி இதனால் நன்றாக விளங்குவதாயிருக்

கிறது. எப்போதும் கொடுங்கோலரசு குடிகளுக்குக் கேடேயாகும். குடிகள் வருந்த அரசன் சுகிப்பது எப்படி? இப்பொழுது எங்கும் ஜனப்பிரீதியைநாடி யுழைக்கும் துரைத்தனமே வலுத்துவர, ருஷியாவில் மட்டும் ஏகாதிபத்தியமும், கொடுங்கோலுமே அரசனுக்காதாரமாகவிருந்துவருகிறது. கொடுங்கோலதிகாரத்தின் கீழுண்டாகும் குழப்பமும் கலகமும் இப்பேர்ப்பட்ட ஆபத்காலத்தில்தான் தலையெடுக்கும். அப்படியே ருஷியாவிலெங்கும் உள்கலகமும், குடிபயமும், தலைகாட்டிவருகிறதாகத் தெரிகிறது. இந்த யுத்தம் இன்னும் மும்மரமாகநடக்கவில்லை. எல்லாம் உள்ளூர எரிந்துகொண்டு வருகிறது. எந்த சமயத்தில் குபீரென்று கிளம்பி காட்டுத்தீபோல் இந்த யுத்தம் எங்கும் பரவுமோ என்று எல்லாரும் ஆவலாயெதிர்பார்த்திருக்கிறார்கள். மார்ச்சுமீ 10உ ஜப்பானியர் போர்ட் ஆர்தர் பட்டணத்தையும் துறைமுகத்தையும் தாக்கி மிகச் சேதப்படுத்தி விட்டதாக தந்தி சமாசாரம் வந்திருக்கிறது. இது இன்னும் உறுதியாக ஏற்படவில்லை.

---

## சுகுண சுந்தரம்.

---

### XIII.

சண்பகாவதி சுமுகரைப் பார்த்து "சுமுகரே! சுகுணசுந்தரர்கள், 'இவ்வுலக வின்பங்களைத் துறந்து சென்றனராயினர்' என்று மாத்திரஞ் சொல்லினீரே; அவர்கள் எவ்வாறு சென்றனர், அவர்கள் வானுலகு செல்லக் காரணமென்னையோ? ஒளியாமல் உள்ளது உள்ளபடி அறிவிக்க வேண்டுகின்றோம்" என, சுமுகர், "பெண்காள்! சாருதத்த மகாராஜா உங்களிருவரையும் தம்மிடம் இப்போதே அழைத்து வரச்சொல்லினர். அங்குவந்தால் எல்லாம் வெளியாகும்" என்றார்.

சண்பகாவதி: "நாங்கள் அவண் வருவதில் ஆக்ஷேபனையொன்றுமில்லை. அச்சுந்தர புருஷர்கட்குற்ற விபத்தை முதலில் தெரிந்துகொள்ள விரும்புகின்றோம்."

சுமுகர்: "கன்னிகாமணிகாள்!" என்று சுசீலபூபதி விவாகத்திற்குப் பூர்வாங்கமாய்ச் செய்யவேண்டிய சடங்குகளைச் செய்தது முதலான எல்லாவற்றையுஞ் சூக்ஷமமாய்ச் சொல்லிமுடித்தனர். சுமுகருடைய மொழியை உற்றுக் கவனமாய்க்கேட்ட சுலோசனையும் சண்பகமும், "சுகுண சுந்தரர்கள் தத்தம் உயிரை ஈசுவரார்ப்பணஞ் செய்திருக்கிறார்கள் போலும்" என்று சொல்லிக்கொண்டிருக்கையிலேயே பளிச்சென ஓர் ஜோதிஸ் தோன்றி, அதில் இவ்விரு பெண்களும் மறைந்தனர். சுமுகர் ஒன்றுந்தோன்றாமல் திப்பிரமைகொண்டு, இதுவும் ஈசன் திருவிளையாடல்களிலொன்றாமென மனதிலெண்ணி, அரண்மனை நோக்கிச்சென்று தான் வார்த்தையாடிக்கொண்டிருக்கையிலேயே இராஜ கன்னிகைகள் காணமற் போனதைச் சொல்லிவியந்தனர்.

இவ்வளவையும் அறிந்த கிருபாகடாக்ஷ முனிவர் சுசீல மகாராஜனையும், சுமந்தரனையும் சமாதானஞ் சொல்லி அவரவர்கள் பத்நிகளுடன் தம் ஆச்சிரமத்திற்கு இட்டுச் சென்றனர். காமபாலனும் சாருதத்தராஜனும் கிருபாகடாக்ஷரைப் பின்சென்று அம்மகாமுனிவர் உரைத்த தைரியமொழியினால் ஒருவாறு மனந்தேறி தத்தம் பதியை யடைந்தனர்.

இந்த அற்புத லீலா விநோதங்களை எல்லாம் பார்த்தும் கேட்டும் அறிந்த மற்ற இராஜாக்களெல்லாம் தாம் வந்தவழியே நோக்கிச் சென்றனராயினர். சாருதத்தனும் மனோரமையும் துக்க சாகரத்தில் மூழ்கித் தவித்துக்கொண்டிருந்தனர்.

மதிவிலாஸனும், சுமுகனும் அவர்களைத் தேற்றிக்கொண்டு இராஜகாரியங்களைச் சரியாய்ப் பாதுகாத்துக் கொண்டிருந்தார்கள். சுலோசனையின் இன்னுயிர்த் தோழிகளான கனகம், மரகதம் இருவரும் பட்ட துக்கத்தை இங்கே யெழுதிமுடியாது. இவ்வாறு ஹேமாபுரியில் மங்களம் அமங்களமானதைக் கண்டு சகியாதவனாய் தினகரன் அஸ்தகிரியில் போய் மறைந்தனன்.

* * * *

### XIV.

இப்பொழுது இராக்காலம். எங்கு பார்த்தாலும் நிசப்தமாயிருந்தது. அழகில் இரதிதேவியை ஒத்து விளங்கும் ஓர் மாது வீதிவழியாகச் சென்றனள். அந்த வீதியின் இருமருங்கிலும், வீடுகள் வரிசைவரிசையாக ஏழடுக்குள்ள உப்பரிகைகளுடன், அதியுன்

னதுமாகப் பார்ப்பவர்களுக்கு விந்தையைப் பயக்கும், வண்ணம், சந்திரகாந்தம் முதலான கற்கள் வைத்துப் பதித்துச் சமைக்கப்பட்டு சிறந்த மாளிகைகளாகத் தோன்றின. அந்த வீதியின் வழியேசென்ற மாது, அரசன் வயிற்றிற் பிறந்து எல்லாக் கலைகளையுங் கற்றுத்தேர்ந்தவளாகத் தோன்றினாள். வயதோ 16,17 இருக்கலாம். கலியாணம் ஆனவளாகத்தோன்றவில்லை. ஆனால் தன் காதலனைப்பற்றியே சிந்தித்து வருத்தமுற்றவளாக அவள் முகக்குறியைப் பார்ப்போர்கள் எளிதில் உணர்வார்கள். இவள் சிறுமியான பெண்மணியேயானாலும் முதிர்ந்தவிவேகமும், உள்ளன்பும், தான் நேசித்த காதலனையன்றி வேறு யாரையும் மணம்புரிவதில்லை என்ற நோக்கமுடையவளாகவும் காணப்பட்டனள். "நான் எங்கிருந்தேன்! இங்குவாக் காரணமென்னவோ! உன்னத மேடைகளுடன் கட்டிய அழகிய இந்நகரம் எந்த மகானுடையதோ!! இந்நகரின் பெயர்தான் என்னோ? இந்நகரத்திற்கு எப்படிவந்தேன்!!! என்ன ஆழ்ந்து யோசித்தாலும் ஒன்றும் தோன்றவில்லையே; இதுகனவோ, நினைவோ? இந்நிசிவேளையில் நான் இவ்வீதியில் ஒண்டியாய் நடந்து போவதை ஓர் ஆடவன் பார்க்க நேரிடில் என் கதி என்னவாகுமோ'' என்று புலம்பிக்கொண்டே அம்மாதுசிரோமணி; மெள்ளமெள்ள அவ்வீதிவழியேசென்றுகொண்டிருந்தனள்.

அப்போது அதே வீதிவழியாய் ஓர்ஆடவன் தனக்கெதிரில் வரக்கண்டனள். அவனைக்கண்டு திடுக்கிட்டனள். "அழகும், யௌவனமும் ஒருங்குவாய்த்த பெண் ஒருத்தி தனித்து வழிநடக்க நேரிடுங்கால், தன்னாயகனல்லாத யௌவன புருஷன் ஒருவன் கூட சஞ்சாரஞ்செய்ய நேரிடின், சில அசர்ந்தப்பங்கள் சம்பவிப்பதுண்டு; ஆனால் எனக்கு ஒன்றின் பின் ஒன்றாய் சம்பாவிதமாகும் விபத்துகள் மாதிரி இவ்வுலகைத்தவிர வேறு உலகங்களில் என்னைப் போன்ற யுவதிகட்குச் சம்பவித்திருக்கமாட்டாது'' என்று எண்ணி மனநொந்தனள்.

மேற்கூறிய சுந்தரபுருஷன் இந்தக் காந்தமணியைக் கண்டதும் சற்று மயங்கி, அவள் பக்கலணுகி அவளது இளந்தளிர்க்கொப்பான கரத்தைப்பற்றத் துணிந்தனனாயினும், அவ்வநிதாரத்னம் அவனுடைய உள்ளத்தை அறிந்து, அதற்கிடங்கொடாது, விலகிச்சென்றனளாயினள். அவ்வாடவன் அவளை நோக்கி "அடி! என்னுள்ளத்தைக் கொள்ளைகொண்ட கள்ளச்சிறுமி! இந்நிசியில் இங்கு தனித்திருப்பதேன். இதோ என் அழகிய வீடு. அதற்குள் செல்வோம் வா'' என்றவுடன், தனக்கு அவனை மீறித் தப்பிப்போக வேறுமார்க்கமின்மையால், அம்மாது அவ்வீட்டிற்குள் செல்லவேண்டியதாயிற்று.

அச்சுந்தரவதி முன்னும் அந்த ஆடவன் பின்னுமாகப் போகும்போது, மேனிலைக்குச் செல்லும்வழி காணப்பட்டது. அதுபற்பல நிறமுள்ள கற்களின் ஒளியைப் பிரகாசிக்கச் செய்ததுமல்லாமல், அந்த கற்களின் ஒன்றின்மேலொன்றாய் மாறிமாறிச் சுற்றிச்சுற்றி மேலே ஏறும்படி கட்டப்பட்டிருந்த சோபனவரிசைகளின் வழியே சென்று பார்க்கையில், ஓர் பெரிய மாளிகை காணப்பட்டது. அம்மாளிகையில் விதம்விதமான கண்ணாடி விளக்குகள் பிரகாசித்துக் கொண்டிருந்தன. அம்மாளிகையோ, திருப்பாற்கடலின் தோற்றம்போலவும், அதில் பிரகாசித்துக்கொண்டிருந்த விதம்விதமான விளக்குகள், க்ஷீராப்தி மத்தியில் தங்கிய ஆதிசேஷனது பணாமணிகளைப்போல கிரகணங்களையுமிழ்ந்தனவோ என்று சொல்லும்படிக்கு மிருந்தது. அங்கே நடுவில் போடப்பட்டிருந்த சுவர்ணத் தகட்டாற் பொதித்த கால்களுடன் கூடிய ஹம்ஸதூளிகா சயனதல்பம் ஒன்று இருந்தது. அதின் நாற்பக்கங்களிலும் நவரத்தினங்களாலிழைத்த கால்களாலும் விளிம்பில் சுவர்ணத்தகடுகள் அழுத்தியும் அதன் கீழ் தொங்கும்படி செம்பட்டு ஜாலர்களும், மணிக்கோவைகளும் கட்டிய அசுமானகிரியின் விசித்திரத்தையும்; அதற்கடுத்த இருபுறத்திலும் பொன்னினாற் செய்த பன்னீர்ச்செம்புகளும். சந்தணப்பியாலாக்களும், அதன் மத்தியில் ஆகாய கங்கையில் மலர்ந்த பொற்றாமரை மலர்போன்ற சுவர்ணத்தட்டில் மாரகதத் தகடுபோன்ற மெல்லிலைத் தளிர்களும், துவர்க்காய்ப்பிளவுகளும், முகவாச திரவியக்குப்பல்களும், அதன்மேல் ரோஜாமலரால் குச்சுகட்டிய ஜாதி மல்லிகை, முல்லை முதலான புஷ்ப ஹாரங்களும், வைக்கப்பட்டிருந்த விமரிசையையும், அந்த சயனத்தின் பக்கலில், அதிநிர்ப்பந்தத்திலகப்பட்ட மான்பேடு

போல் மிரளமிரள விழித்துக்கொண்டு அதிக துக்கத்தோடு ஓர் சுந்தரி நிற்றலேயும், அவளை ஓர் சுந்தரத்திருமேனிவாய்த்த கட்டழகன் நல்வார்த்தைகளால் தன்னை மணம்புரியும்படி பலவிதமாய் வேண்டிக்கொள்வதையும், அதற்கவள் இணங்காமொழியுரைத்தலேயும், உற்றுக் கவனமாய்க்கேட்டு மனம்பொறுமல் இவள், "ஐயோ சுலோசனே! நீயுமா இங்கே வந்து ஒண்டியாய் சிக்கிக்கொண்டனே, சூரியாஸ்தமனசமயத்தில் நாமிருவரும் பூந்தோட்டத்தில் சுமுகருடன் வார்த்தையாடிக் கொண்டல்லவா இருந்தோம். நம்மை தெய்வம் இன்னும் என்னென்ன பாடுபடுத்த இருக்கிறதோ!" என்று கதறினள். இந்தக் கடுமொழியுரைத்த கன்னிகாமணியை சண்பகாவதி என்று நாம் சொல்லாமலே இதைவாசிக்கும் சிறுமி சிறுவர்கள் எளிதில் அறிந்துகொள்வார்களென்று நம்புகிறோம். சண்பகத்தைக் கண்ட சுலோசனையும் பதறினள், கதறினள், என்செய்வதென்று மயங்கினள்.

சண்பகத்தை வீதியிலிருந்தபடி இங்கழைத்துவந்த யுவபுருஷன் "அடதோழ சுரூப! இந்தப் பெண்மணிகளிருவரும் ஒருவரையொருவர் பார்த்ததும், இவ்வாறு அலறுகிறார்கள். இவ்விருவருக்கும் ஏதேனும் சம்பந்தம் இருத்தல்வேண்டும். நீ கோரிக்கொண்டுவந்த மாதைச் சமாதானமொழியுரைத்துத் தேற்றக்கடவாய்; நான் கொடுவந்த இந்தப்பெண்மணியை என்னுடைய மாளிகைக்கு இட்டுச்செல்லுகின்றேன். இருவரும் சேர்ந்திருத்தல் நம்முடைய எண்ணத்திற்கு முற்றும் விரோதம் என்று எண்ணுகின்றேன்." என, அவன், "அட, சுவதன! நான் என்ன நன்மொழி கூறியும் இவள் இணங்குகின்றாளில்லை. இன்னும் பார்க்கிறேன். நீயும் அவளை உன் மாளிகை சென்று நன்மொழிகூறுவாய். இவ்விருகண்மணிகளேயும் நாளை யுதயத்தில் நாம் இருவரும் மணம்புரிய வேண்டும். இவ்விருவரும் நமக்கிணங்காவிடில், இதோ என்கையிலிருக்கும் வாளுக் கிவர்களை இரையாக்குவேன். திண்ணம்." என்று கடிந்து மொழிந்தனன். இந்த மொழியைக்கேட்ட சுலோசனை ஒன்றுந்தோன்றாது மயங்கினள். அப்போது சுவதனன், சண்பகத்தைப்பார்த்து "அடி என் கண்ணே! இனி எங்களை மீறிச்செல்ல உன் தோழியாலும் முடியாது. உங்களிருவருடைய தந்திரங்களும் பலியாது. சுயம்வரத்தினல் உங்களையடைவது கூடாதகாரியமென்றுதான் நீங்கள் இரகசியத்தில் மாலேயிட்ட நாயகர்களான சுகுணசுந்தரர்களைத் தந்திரமாய் மோசஞ்செய்யலானேம். அவர்களுடைய பராக்கிரமத்தைக் காட்டிலும் எங்களுடைய அற்புதத் தந்திரங்கள் பலவுள; அவை மிகவும் வியப்பைத்தருவதாகும். இந்த யௌவனத்திசையில் வீணில் உங்கள் உயிரை என் தோழனும் சுரூபனுடைய வாளுக்கிரையாக்காதீர்கள்." என்று படபடத்துச் சொல்லிக்கொண்டே அவள் கையைப்பற்றி இழுக்க முயலுகையில், அவள் "பாவி என்னென்னகேடு விளைப்பானே!" என்று அவன் கையில் சிக்காமல் அம்மாளிகையின் கீழ்பாகத்தில் தென்பட்ட ஒரு சிறிய நுழைவாயிலின் வழியே செல்ல இதைப்போன்ற வேறு ஒரு மாளிகையைக் கண்டனள். சுவதனனும் அவள் பின் சென்றனன்.

(இன்னும் வரும்)

டி. எஸ். சுப்பராமஅய்யர்.

---

Children's Page.

GRIMME'S FAIRY TALES.

சிறுவர்க்கானபக்கம்.

## மேற்றிசைக் கூளிக்கதைகள்.

---

### 1. பேதைமதியின் அதிர்ஷ்டம்.

**பேதைமதி** என்பான் ஒருவன் எழு வருஷகாலம் ஒரு யஜமானனிடத்தில் பணிபூண்டிருந்தான். ஒரு நாள் யஜமானனிடத்தில் போய் "நான் வந்து வெகு நாளாயிற்று. என்வீட்டையும் தாயாரையும் பார்க்க ஆசை அதிகமாயிருக்கிறது. ஆகையால் என் சம்பளத்தைக் கணக்குப்பார்த்துக் கொடுங்கள்" என்றான். யஜமானன் அதைக்கேட்டு, "நீ மிக்க விசுவாசத்தோடும் சோம்பலின்றியும் உழைத்தாய். ஆகையால் உன் சம்பளம் யதேஷ்டமாகக் கணக்காகிறது" என்றுசொல்லி, அவன் தலையத்தனை பெரிதுள்ள ஒரு வெள்ளிக்கட்டியை அவனுக்குக் கூலியாகக்கொடுத்தார்.

2. **பேதைமதி** தன் மேல்சவுக்கத்தை விரித்து அதில் அவ்வெள்ளிக் கட்டியைவைத்து, மூட்டையாகக்கட்டித் தன்தோளில் போட்டுக்கொண்டு தன்னூரை நாடிப்போனான். மூட்டை கொஞ்சந் தூரம் போகவே கனத்துத்தோன்ற, வேகமாய் செல்ல முடியாமல் அடிமேலடிவைத்து நடந்துகொண்டிருக்கையில் மிக்க உற்சாகத்தோடும் ஒருவன் குதிரைசவாரி செய்துவருவதை யெதிர்கண்டான். "குதிரைசவாரிசெய்வது எவ்வளவு நேர்த்தியானது! அதோ! அவன் தன்வீட்டு நாற்காலியிலிருப்பதுபோல எவ்வளவு கம்பீரமாக வீற்றிருக்கிறான். அவன் கால்கள் கல்லில் இடறா, பாதரக்ஷையும் தேயாது. அவனும் மிக்க உற்சாகத்தோடு போகிறான்" என்றுசொன்னான். குதிரைமேல் வந்தவன் அதைக்கேட்டு, "என் நீ கால் கடுக்க நடக்கிறாய்"? என்றான். அதற்கிவன் "இந்த வெள்ளிக்கட்டியை நான் தூக்கிக்கொண்டு போகவேண்டியிருக்கிறது. அது வெள்ளியானாலும் தூக்கமுடியாதபடி அவ்வளவு கனக்கிறது. தோளும் மெத்த எரிகிறது" என்றான். "நான் உனக்கிந்தக் குதிரையைக் கொடுத்து விடுகிறேன். நீ எனக்கு அந்த வெள்ளிக்கட்டியைக் கொடுக்கவேண்டும். என்ன சொல்லுகிறாய்?" என்று குதிரைமேலிருப்பவன் கேட்டான். "என் முழுமனதோடும் கொடுக்கிறேன். ஆனால் ஒன்று சொல்லுகிறேன். நீ ஒரு பெரிய மூட்டை தூக்க வேண்டிவரும் அதை யோசித்துப்பார்" என்று மறுமொழி கூறினான் **பேதைமதி**. உடனே குதிரைமேலிருந்தவன் கீழிழிந்து, அந்த வெள்ளியைக் கைப்பற்றிக்கொண்டு பேதைமதியைக் குதிரைமேல்சரியாய்உட்காரச்செய்து, கடிவாளத்தைக் கையில் கொடுத்து, "உனக்கு வேகமாய்ச் செல்லவேண்டுமென்று தோற்றினால் 'ப்பப்' என்று ஒருமுறை சத்தமிட்டால் வேகமாய்ச்செல்லும்" என்றனன்.

3. குதிரைமேல் தானிருப்பதைக்கண்ட பேதைமதிக்குண்டான சந்தோஷத்துக்களவில்லை. அவன் மிகுந்த உற்சாகத்தோடும் சவாரிசெய்தான். கொஞ்ச நேரத்துக்கெல்லாம் வேகமாகப் போகவேண்டுமென்று அவனுக்குத்தோற்ற அவன் அந்தக் குதிரைக்காரன் சொன்ன மந்திரத்தை உரத்துச்சொன்னான். அக்குதிரை நாற்காற்பாய்ச்சலா வோட ஆரம்பித்தது. பேதைமதி அது செய்யப் புகுவது இன்னதென்றறியா முன்னர் ரஸ்தாவுக்கடுத்த ஒரு சகதிக்குழியில் தன்னைக்கண்டான். சமீபத்தில் வந்துகொண்டிருந்த ஓரிடையன் குதிரையைக் கடிவாளத்தாற் பிடித்திருத்தி யிராவிட்டால் அது ஓடியே போயிருக்கும். பேதைமதிக்கு நினைவுவந்து, எழுந்து வந்தான். அவனுக்கு வருத்த மதிகமாயிற்று. அவ்விடையனை நோக்கி "ஒருகுதிரை, இம்மாதிரிக் காலிடறி, மேல் இருப்பவனை கழுத்து முறிந்து போம்படி தள்ளுகிறபோது, சவாரிசெய்வது லகுவான விளையாட்டன்று; என்றாலும் நான் இனிக் குதிரை கையில் அகப்படாதபடி தப்பித்துக் கொண்டேன். உன் பசுவினிடத்தில் எனக்கு அதிக விருப்பமிருக்கிறது. அதன்பக்கத்தில் ஒருவன் சங்கடமில்லாமல் செல்லலாம். மேலும், பசுவை வைத்துக்கொண்டிருப்பவனுக்கு பால், தயிர், வெண்ணெய் முதலியன ஒவ்வொரு நாளுங்கிடைக்கும். அப்பேர்ப்பட்ட பசுவுக்கு நான் என்ன கொடுக்க வேண்டிவரும்?" என்று பேதைமதி கேட்டான். "நல்லது உனக்குப் பசுவினிடத்தி லாசையிருந்தால் நாமிருவரும் பசுவையும் குதிரையையும் மாற்றிக் கொள்வோம்." என்று இடையன் சொன்னான். உடனே பேதைமதி சம்மதித்தான். இடையன் பசுவை விட்டுக் குதிரைமேலேறிக் கொண்டுபோய் விட்டான்.

4. பேதைமதி தான் ஒரு நல்லவியாபாரம் பண்ணிவிட்டதாக எண்ணிக்கொண்டு பசுவையோட்டிக்கொண்டு போனான். "ஒரு இட்டிலி மாத்திரம் கிடைக்கும்பக்ஷத்தில் (அதுவும் நிச்சயம் கிடைக்கும்) வெண்ணெயோடு சேர்த்து சாப்பிட்டு விட்டு தாகத்துக்கு பாலும் குடிப்பேன். அதற்குப் பின்னெனக் கென்னவேண்டும்" என்று சொல்லிக் கொண்டே போனான். ஒரு கள்ளுக்கடைக்கு வந்து இட்டிலி வாங்கித்தின்று மிகுந்திருந்த காசுக்கு ஒரு கோப்பை கள்ளையும் வாங்கிக் குடித்துவிட்டு பசுவை போட்டிக்கொண்டு போனான். நடுப்பகலில் வெயில் அதிகரித்தது. அவன் ஒருபாலையைத்தாண்டிச் செல்ல வேண்டியதாயிற்று. கால்பொசியத் தலை கொதிக்க நாவரள ஒருமணிநேரத்தி லதைக்கடந்து சென்றான். தாகத்தால் நாபின்ன

ஆரம்பித்தது. பசுமாட்டைப் பக்கத்திினின்ற மரத்தடியில் கட்டி தன் தோல் குல்லாவிற் பால்கறக்க ஆரம்பித்தான். ஒரு சொட்டுப்பால் கூடவரவில்லை. இவனும் முன்பின் கறந்தறியாததலின் அதன் முலைக்காம்புகளை முறைதவறிப் பிடித்திழுக்கவே பசு வலிபொறுக்கமாட்டாமல் விண்ணென்றுதைத்தது இவனுடைய நல்லதிர்ஷ்டத்தால் ஒற்றைச் சக்கரவண்டியில் ஒரு பன்றியைக் கட்டியிழுத்துக்கொண்டு ஒரு கசாப்புக்காரன் அவ்வழியே வந்தான். "என்ன ஐயா சமாசாரம்" என்று அக்கசாப்புக்காரன் இவனைத் தூக்கிவிட்டான். பேதைமதியுற்றதையெல்லாம் முற்றப்பகர்ந்தான். "இதோ! இதைக் குடித்துக் களைதீர்த்துக்கொள்," என்று ஒரு புட்டில் கள்ளைக்கொடுத்து "இந்தமாடு கசாப்புக்கடைக்குதவுமேயல்லாது வேறொன்றிற்கும் பயன்படாது. கிழப்பட்டுவிட்டது" என்று சொன்னான். "ஐயோ! இம்மாதிரியாகும் என்று யார் எண்ணியிருப்பார்? நான் இதைக்கொன்றால் என்னத்துக்காகும்? எனக்கு மாட்டிறைச்சியே பிடியாது: பன்றியிறைச்சியாயின் குழம்புபண்ணலாம். ரஸம்பண்ணலாம்" என்று பேதைமதி சொன்னான். "நல்லது உன் திருப்திக்காக நான் வேண்டுமானால் பசுவைக் கொண்டு பன்றியைக் கொடுக்கிறேன்" என்றான் கசாப்புக்காரன். "ஈசுவரனுன்னைக் கடாக்ஷிப்பாராக என்று சொல்லித் தன் பசுவை யவனிடத்தே கொடுத்து, பன்றியின் கட்டை அவிழ்த்து அதன் ஒருகாலில் கட்டியிருந்த கயிற்றைப்பிடித்து விரட்டிக்கொண்டுபோனான்.

5. இப்படிக் கொஞ்சதூரம் சந்தோஷத்தோடு போகாமுன்னர், தன்கையில் ஓழுகிய வெள்ளை வாத்தைத்தூக்கிக் கொண்டுபோன ஓர்பட்டிக்காட்டானைச் சந்தித்தான். அவன் இவனண்டை மணி கேட்க வந்தபோது, இவன் தன்னதிர்ஷ்டங்களையெல்லாஞ்சொல்லிக் குதூகலித்ததுமன்றி, தனக்கு அவ்வித துஷ்டமிருகங்களெல்லாம்போய், சாதுவான பன்றிகிட்டிற்றே என்று மெத்தக்களிகொண்டான். பட்டிக்காட்டானும் தான் அவ்வாத்துக்கு ஞானஸ்நானங்கொடுக்கக்கொண்டு போவதாகவும், பிறந்து எட்டுவாரமேயாயினும் எவ்வளவு பாரமாயிருக்கிறது பாரென்றும் கூறி, அதைப்பொரித்து புசிப்பவனுக்கு அதிகம் கொழுப்பு எடுக்கக்கூடுமென்றான். உடனே பேதைமதி அதைத் தூக்கிப் பார்த்து "நீ சொல்வதுசரி. ஆனால் என் பன்றி உன் வாத்துக்கு எவ்விதத்திலும் தாழ்ந்ததில்லை" என்றான். இவ்வார்த்தையைக் கேட்டதும் திகைத்துத் தலையசக்கிப் பின்வருமாறு கூறலுற்றனன்:—

"என் நண்பரே! சற்றே செவிகொடுத்து யான் சொல்வதைக்கேளும். இந்தப் பன்றி உம்மைச் சங்கடத்தில் இழுத்துவிடும். நான்வருகிற ஊரின் பெரிய தனக்காரன் பன்றி இதுபோல ஒன்று கூட்டினின்றும் திருட்டுப்போயிற்று. உன்னைக் கண்டவுடன் அந்தப் பன்றியை நீதான் திருடிவந்தவனென்றெண்ணினேன். அவர்கள் உன்னைக் கண்டு பிடித்துக்கொண்டால், உடனே உன்னை பிடித்துக் குதிரைக் கொட்டகையில் அடைத்து விடுவார்கள்."

6. இதைக்கேட்டவுடன் பேதைமதி நடுநடுங்கி உடல் வியர்த்து, வாய்குழறி "அப்பா! இந்த விபத்தினின்றும் எப்படியாவது தப்புவித்துவிடு: இந்தப் பக்கங்களைப்பற்றி என்னைவிட உனக்கு நன்றாகத் தெரியும். என் பன்றியை யெடுத்துக்கொண்டு உன் வாத்தைக்கொடு" என்றான். அதற்கு அப்பட்டிக்காட்டான் "இந்த விஷயத்தில் நீ இன்னும் விசேஷ திரவியமூலமான உதவிசெய்யவேண்டும். நீ கேட்கும்போது ஆபத்தில் அகப்பட்டுத் தவிக்கிறபடியால் உன்னை அதிகம் தொந்தரிப்பது சரியன்று. உன் பன்றியைமாத்திரம் ஒப்புக்கொள்ளுகிறேன்" என்று சொல்லி பன்றியைவாங்கிக்கொண்டு, ஒரு குறுக்கு வழியா யோடிவிட்டான். பேதைமதியும் பயம் நீங்கிக் கவலையொழிந்து தன்னிச்சையே சென்றான். கடைசியாக இப்போது கிடைத்த லாபம் முன் எந்த வியாபாரத்திலும் கிடைக்கவில்லை: முதலில் நல்ல பெர்ரியல்கிட்டும். பிறகு அதன் சதையில் ஆறுமாதத்துக்கு நிற்கும் நெய்கிடைக்கும் அப்புறம் வெள்ளைத்தூவிகள் ஏராளமாகக்கிடைக்கிறது. என் தலையணைக்குள் வைத்துத் தைத்துத் தலைக்குவைத்துப் படுத்தால் நல்ல தூக்கம் வரும். உறுத்தாது கொ[illegible]ளாது. இதைப்பார்த்து அம்மாளுக்கெவ்வளவு [illegible]தோஷம் உண்டாகும்" என்று தன்னுள் ஆலோ[illegible]சித்தேகினான்.

கடைசிஊருக்கு அவன் வந்தபோது

7. "மலையெனவில்லை வெளியென வில்லை
கண்டவிடமெல்லாம் களிப்புடனுலவுவேன்
பணியும் மிலகு பயனும் மெத்த
ஊரகமெல்லா மென்னகமாமே!
என்னோற் சுகிப்போரிருப்பரேல்வருக."

என்று பாடிக்கொண்டு கையில் ஓர்சாணைக்கல்லைத் தூக்கித்திரியும் ஒரு சாணைபிடிக்கிறவனைக் கண்டான். "நீ சுகிபோல் தோற்றுகிறாய் ஏனெனில் உன் வேலையினிடத்தில் நீ ஊக்கத்தோடும் உற்சாகத்தோடு மிருக்கிறாய்" என்று அவனை நோக்கிச்சொன்னான். "ஆம் என்னது உத்தமமானவேலை. என் சட்டைப்பையில் காசில்லாத நேரங்கிடையாது. அஃதிருக்கட்டும்; உனக்கு அந்த அழகியவாத்து எங்கேகிடைத்தது சொல்?" என்றான். பின்னவன் "நான் இவ்வாத்து விலைகொடுத்து வாங்கவில்லை. பன்றிக்கு மாற்றினேன்" என்று விடையீந்தான் பேதைமதி. "பன்றி எங்கே கிடைத்தது? அதற்காக ஓர்பசுமாட்டைக் கொடுத்தேன்" "பசுவோ?" "குதிரைக்கீடாக வாங்கினேன்" "குதிரையோ?" "என் தலையத்தனை பெரியவெள்ளிக்கட்டி கொடுத்து வாங்கினேன்" "வெள்ளிக்கட்டியோ" "எழுவருஷம் சிரமப்பட்டு உழைத்தேன்." "இதுவரையில் நீ உலகத்தில் மெத்தச்சிரமப்பட்டிருக்கிறாய். இப்போது நீ உன் சட்டைப்பையில் கையைப்போட்டவுடன் பணமும் காசுங்கிடைக்குமானால் நீ அதிர்ஷ்டசாலிதான். பணக்காரனுங்கூட ஆவாய்" என்று சாணைபிடிக்கிறவன் சொன்னான். "மிகவும் உண்மைதான். அதெப்படிச்செய்து கொள்ளுகிறது?" "நீயும் என்னைப்போல் ஒரு சாணைபிடிக்கிறவனாகவேண்டும். ஆனால் அதற்கு உனக்கு ஒரு சாணைக்கல் மாத்திரம் தான்வேண்டும் மற்றதெல்லாம் தானேவந்துவிடும். இதோ கொஞ்சம் கரடுமுரடான ஒரு கல் இருக்கிறது. இதை அந்தவாத்துக்குக்கொடுத்துவிடுகிறேன். வாங்கிக் கொள்வையா? என்று கேட்டான் "நீ ஏன்ன அப்படிக் கேட்கிறாய்? என் சட்டைப்பையில் எப்போதும் பணம் கிடைக்குமென்றால் நானே இவ்வுலகில் சுகவான். அதைவிட வேறு என்னவேணும் அவ்வாத்து எடுத்துக்கொள்" என்று சொல்லிக் கொடுத்தான். சாணைபிடிக்கிறவன் அதை வாங்கிக்கொண்டு தன் பக்கத்தில் கிடந்த ஒரு சாமானிய கல்லை எடுத்துக்கொடுத்து, "இதுமிகச் சிறந்தகல்; கொஞ்சங்கெட்டிக்காரத்தனமாய் இதை உபயோகி, ஆணியெடுத்து இந்த மேடு பள்ளங்களை யெல்லாம் சமப்படுத்திவிடலாம்" என்றனன்.

8. பேதைமதி அக்கல்லை யெடுத்துக்கொண்டு மிக்கக் குஷாலோடும்போனான். அவன் கண்களில் மிக்கசந்தோஷத்தால் ஆநந்தபாஷ்பம் பெருகியது. நான் எவையெல்லாம் விரும்புகிறேனோ அவை தாமாய்க் கிடைக்கின்றன" என்று மனதில் நினைத்தான்.

9. இதற்கிடையில், அவன் காலைமுதல் பிரயாணம் பண்ணிக்கொண்டு வந்தவனாதலால் மெத்தக் களைத்துப்போனான். தனக்குக் காமதேனு வந்துவிட்டதென்ற உற்சாகத்தில் கையிலிருந்த கடைசிச் சல்லியையும் செலவழித்துவிட்டான். அதற்குமேல் அவனால் நடக்கமுடியவில்லை. கல்லோ மெத்தக்கனத்தது. என் செய்வான் பாபம்! மெள்ள அருகிலிருந்த ஒரு குளத்தண்டை தண்ணீர் குடித்துக் களைப்பாறலாமென்று நகர்ந்து சென்றான். சென்று அந்தக் கல்லைச் சாக்கிரதையாய்க் கரையோரத்தில் வைத்தான். தண்ணீர் குடிக்கக் குனிந்தபோது, கல்லைமறந்து அதைக் கையால் எத்திவிட்டான். அது 'ளுளக்' என்று தண்ணீருக்குள் ஓடிவிட்டது. தண்ணீர் மிகத்துல்லியமாயிருந்தபடியால் அக்கல் அடியில்போகும்வரையில் நன்றாகத் தெரிந்தது. அடியிற்சேருங்காறும் உற்று நோக்கியிருந்து ஒரு தரந்துள்ளிக்குதித்து, "எனக்குக் கோமாரி பற்றியது போல் என்னைப் பற்றிக்கொண்டிருந்த அந்தக்கல்லை என்னின்றும் பிரித்த தேவனுக்கு அனந்தகோடி நமஸ்காரம். இப்போது என் மடியில் கனமுமில்லை வழியில் பயமுமில்லை. என் சுகமேசுகம்." என்று சொல்லி முழங்காலிட்டு விண்ணைப் பார்த்தான். அதி நிர்மலமாய் நித்தமாய் சுத்தமாய் எங்கும் நிறைந்ததோர் ஏகரஸமாய் விளங்கக்கண்டு அதி வீடுபட்டவனாய்த் தன்னை மறந்து தனிமுதல்வன் சிந்தையேயன்றி வேறு சிந்தையில்லாதவனாய் நின்றான். நிர்மல ஆகாயத்தில் பளீரென்று ஒரு ஜோதி யுதிக்கக்கண்டு பாலோடு பால் கலந்ததுபோலும் அதிலொன்றுபட்டு ஐக்கியமானான். பிறகு தேகஸ்மரணை வந்தபோ

தான் அந்த சோதிவடிவிற் கலந்த காரணத்தால் பரிசவேதிபட்ட செம்பு தங்கமாக மாறி விளங்குவது போல தான் முற்றும மாறியிருக்கக் கண்டான். இவன் உலக வியவகாரங்களை யொன்றும் தெரியாத முழுமூடனானாலும், ஹிருதயம் மாசுமறுபடியாது நிர்மலமாயிருந்தபடியால் ஆசைகளெல்லாம் விட்டொழியவும் பற்றுதலெல்லாம் விட்டகாரணத்தால் பற்றற்றவிடமாம் பரத்தில்போய் அவன் மனம் லயித்தது. அவன் கடவுளைத் துதித்தது உண்மையான பிரார்த்தனையாதலால் அவன் உடனே மனோலயமடைந்து “உலகெலா மறிந்தோ தற்கரியானை” ஒரு நொடியில் கண்டு கலிதீர்ந்தான். நிரவும் தன் ஸ்வரூபத்தைத் தானே யுணர்ந்தவனானான். இப்படிப்பட்ட மூடனுக்கும் இவ்விதமோக்ஷ சாம்பிராஜ்யம் கிட்டுமோ” என்று சந்தேகிப்பார்க்கு, கடவுள் மனிதனை ஹிருதயத்தைக் கண்டு சோதித்துப் படியளக்கிறாரேயன்றி அவன் உலக சாமர்த்தியத்தைக் கொண்டல்ல. இதனால் ஹிருதய சுத்தியே எல்லாவற்றிலும் பெரிது என்பது விளங்கும்.

“ அறிவறியாமையைநீவியவனே
பொறிவாயொழிந்தெங்குந்தானானபோது
வறிவாயவற்றினுட்டானாயறிவின்
செறிவாகிநின்றவன்சிவனுமாமே.” —திருமந்திரம்

இப்படிப் பெறவரும் பெரும்பாக்கியம் பெற்ற பிறகு அவன் கவலையெல்லாம் நீங்கினவனாய் வீடுபோய்ச சேர்ந்தான்.

ம. வ. சிவசுப்ரமணிய ஐயர்.

THE “VIVEKACHINTAMANI.”

We have received the Arudradarisanam special number of this useful magazine for January 1904. It opens with a message of love from the Far West from Dr. Cuthbert Hall, whose visit in India last winter, he says, “filled my heart with affectionate regard for Indians, I long to revisit your country and come into closer fellowship with your people.” A new year's greeting from Dr. G. U. Pope gives a description of the characteristics of “the sages” from an ancient Tamil classic. “The Arudradarisanam 1904,” “Sir Oliver Lodge on the position of science to-day” and a brief sketch entitled “Saved by Faith—A Godly woman's story of her salvation” are other articles of interest. The rest of the number to the extent of nearly 30 pages is taken with the text of “The Word of the Lord—Being an epitome of the Bhagavatgita: A Godly woman's gift to the faithful and true of her sex and her children.” This version of the ‘song celestial’ is in simple and popular language adopted to the intelligence of women and children. We learn that it is already being used for recitation at home by Brahmin ladies of the South, both young and old during prayer hours. The author known as Avudayarammal was a saintly lady who attained self-realisation by her immense Bhakti. Her name appears in the “Philosophical Songs of the Indian Beggar” a lecture delivered by the late Mr. Ratnaswami Aiyar under the auspices of the Public Lecture Committee, Trivandram, which was published and dedicated “by kind permission” to His Excellency Sir Arthur Havelock. The key-note of all her philosophic and religious songs as well as those of others who have attained ‘self-realisation’ by their faith is “Universal sympathy.” We feel sure that this great work of hers now first published will meet with universal appreciation from the Hindus, who have in it a popular version of their great religious book for the early grounding of women children in their Faith.—*The Hindu.*